மலர் – 1 இதழ் – 12



# தமிழணங்கு

(தமிழராய் இணைவோம்)

இலக்கியம், சமயம், பண்பாட்டு ஆய்விதழ்

ஜுன். 2023

தனிச்சுற்றுக்கு மட்டும்

ஆசிரியர்: முனைவர் திருமதி செ. இராஜேஸ்வரி



இன்னும் பல...



அன்பளிப்பு உரூபாய்: 120/-

தமிழர் இலக்கிய சமய பண்பாட்டு ஆய்விதழ்

# தமிழணங்கு

(தமிழராய் இணைவோம்)

*மலர்-1* *ஏப்ரல்– 2023* *இதழ்-12*





*தனி இதழ் ............................................. ரூ 120*
*அரையாண்டு சந்தா ............................. ரூ 600*
*ஆண்டு சந்தா........................................ ரூ 1200*

Google Pay / Phone Pay *மூலம் செலுத்த*
*+91 7010997639*

**Thamizhanangu**

Printed & Published by
E. Satish Rajkumar (Advocate)
3/422, Thiruvalluvar Street,
Dinamani Nagar, Madurai,
Tamil Nadu 625 018.
Ph: +91 7871123226, +91 7010997639

*கட்டுரைகள் அனுப்புவோர்*

rajetamiljuly1@gmail.com
thamizhanangu1@gmail.com *க்கு அனுப்பவும்*




# செந்தமிழ் நாடெனும் போதினிலே

செந்தமிழ் நாடெனும் போதினிலே - இன்பத்
தேன் வந்து பாயுது காதினிலே - எங்கள்
தந்தையர் நாடென்ற பேச்சினிலே - ஒரு
சக்தி பிறக்குது மூச்சினிலே (செந்தமிழ்)

வேதம் நிறைந்த தமிழ்நாடு - உயர்
வீரம் செறிந்த தமிழ்நாடு - நல்ல
காதல் புரியும் அரம்பையர் போல் - இளங்
கன்னியர் சூழ்ந்த தமிழ்நாடு (செந்தமிழ்)

காவிரி தென்பெண்ணை பாலாறு - தமிழ்
கண்டதோர் வையை பொருனை நதி - என
மேவிய யாறு பலவோடத் - திரு
மேனி செழித்த தமிழ்நாடு (செந்தமிழ்)

முத்தமிழ் மாமுனி நீள்வரையே - நின்று
மொய்ம்புறக் காக்குந் தமிழ்நாடு - செல்வம்
எத்தனையுண்டு புவிமீதே - அவை
யாவும் படைத்த தமிழ்நாடு (செந்தமிழ்)

நீலத் திரைக்கட லோரத்திலே - நின்று
நித்தம் தவஞ்செய் குமரிஎல்லை -வட
மாலவன் குன்றம் இவற்றிடையே - புகழ்
மண்டிக் கிடக்குந் தமிழ்நாடு (செந்தமிழ்)

கல்வி சிறந்த தமிழ்நாடு - புகழ்க்
கம்பன் பிறந்த தமிழ்நாடு - நல்ல
பல்விதமாயின சாத்திரத்தின் - மணம்
பாரெங்கும் வீசுந் தமிழ்நாடு (செந்தமிழ்)

- மகாகவி சுப்பிரமணிய பாரதியார்

## உள்ளடக்கம்

# "தமிழ் இசையின் கொடையே இந்திய இசை"

**முனைவர் சிவ. இளங்கோ,**

*6, கவிஞர் புதுவைச் சிவம் வீதி,*
*வெங்கட்ட நகர், புதுச்சேரி – 605 011.*
*பேசி: 99940 78907.*
*Mail ID: ilangosiva57@gmail.com*



*"தமிழிசை" என்பது தமிழ் மண்ணில் மலர்ந்த தமிழர்களின் இசைமுறை. இசைப்பதற்கு என்றே தமிழில் இயற்றப்பெற்ற அத்தகைய இசைப் பாக்களின் தொகுதியே "இசைத்தமிழ்" எனப்படுகின்றது.*

*இருபதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் ஆபிரகாம் பண்டிதர், விபுலானந்தர் போன்றோரின் இசைத்தமிழ் ஆய்வுகளால் தமிழ் இசையின் பெருமை உணரப்பட்டு, அதுவே ஓர் இயக்கமாக உருவெடுத்தது. அண்ணாமலை அரசர், ஆர். கே. சண்முகம் ஆகியோரின் முயற்சியால் 1942 ஆம் ஆண்டில் தமிழிசை இயக்கம் தோன்றியது. அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் தமிழிசைக் கல்லூரியும், சென்னையில் தமிழிசைச் சங்கமும் உருவாக்கப்பட்டன.*

*இதற்கு முன்னரே இந்தி எதிர்ப்புப் போராட்ட விளைவால் பெரியாரும் அண்ணாவும் தமிழிசைக்காகக் குரல் கொடுத்தனர். "தமிழர் இசையை வளர்த்தது போல் வேறு இனத்தினர் வளர்க்கவும் இல்லை; தமிழர் இசையை இழந்தது போல் வேறு யாரும் இழக்கவும் இல்லை" என்று அறிஞர் அண்ணா குறிப்பிட்டுப் பண்டைய தமிழிசையை மீட்டுருவாக்கம் செய்யும் முயற்சிக்கு ஆதரவாக நின்றார்.*

*சங்கக் காலத்தில் தமிழிசை செல்வாக்குப் பெற்றிருந்ததற்குச் சங்கத் தமிழ் நூல்களே சான்றுகள் ஆகின்றன. தமிழ் மொழியையும் தமிழ் இசையையும் புரந்த மன்னர்களே அப்போது தமிழ் மண்ணை ஆண்டு வந்தனர். களப்பிரர் காலத்திற்குப் பின் வந்த பல்லவர் ஆட்சியின் போது, வடமொழிகள் உயர் நிலை பெற்று, வடமொழி இலக்கிய, இலக்கணம் சார்ந்த நூல்கள் தமிழில் இயற்றப்பட்டன. சங்கம் மருவிய காலத்தின் இறுதியில் பக்தி இலக்கியங்கள் தோன்றித் தமிழிசைக்கு ஒரு மறுமலர்ச்சியை ஏற்படுத்தின. பக்தி இலக்கியங்கள் பெரும்பாலும் இசை வடிவில் இயற்றப்பட்டதால் மீண்டும் தமிழிசை தலை நிமிர்ந்தது. கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டிலிருந்து பதின்மூன்றாம் நூற்றாண்டு வரை பிற்காலப் பாண்டியர்கள், பிற்காலச் சோழர்களின் ஆட்சியில் தமிழிசையும் ஏற்றம் பெற்றது. இவர்களின் காலத்திற்குப் பிறகு வந்த*

முகமதியர், நாயக்கர், மராட்டியர் ஆட்சிக் காலத்தில் தமிழ் இசை செல்வாக்கிழந்து, பதினைந்தாம் நூற்றாண்டில் கர்நாடக இசை எனப் பெயர் மாற்றம் பெற்றது.




தமிழிசை என்று பெருமை பேசுகின்ற அதே நேரத்தில், இசைத் தமிழுக்கான பழந்தமிழ் நூல்கள் இதுவரை நமக்குக் கிடைக்கவில்லை என்பது ஒரு கசப்பான உண்மை. அவை இருந்ததற்கான குறிப்புகள் மட்டும் தான் கிடைக்கின்றனவே தவிர, அதற்கான ஓலைச்சுவடிகள் ஒன்று கூடக் கிடைக்கவில்லை. சிலப்பதிகாரம் மட்டும்தான் பழந்தமிழ் இசையை நிலைநிறுத்தும் ஒரே காப்பியமாகும்.

சிலப்பதிகாரம் கூறும் பண்களை ராகங்கள் என்றும், அலகு என்பதைத் தாளம் என்றும் பிற்காலத்தில் வட மொழிப் பெயர் சூட்டிச், சிவனோடு சேர்த்துக் கதை கட்டி, அதுவே இசையின் தொடக்கம் என்கிற திரிபுவாதம் தான் வடமொழி வாதமாக முன் வைக்கப்பட்டு வருகின்றன.

17, 18 ஆம் நூற்றாண்டுகளில் தஞ்சை, மதுரைப் பகுதிகளைச் சுற்றி வாழ்ந்த சியாமா சாஸ்திரிகள், தியாகராஜர், முத்துசாமித் தீட்சிதர் ஆகிய இம்மூவருமே பார்ப்பனர்கள். இவர்கள் தமிழ்க் கீர்த்தனைகள் எதுவும் இயற்றியதில்லை. தமிழ் இசையில் பாடியதும் இல்லை. எல்லாம் சாஸ்திரிய சங்கீதம் தான். தெலுங்குக் கீர்த்தனைகள் இயற்றித் தெலுங்கிலேயே பாடினார்கள். தமிழுக்கும், தமிழிசைக்கும் துளி கூடத் தொடர்பே இல்லாத இவர்களின் "தெய்வீக

இசை"யைப் பற்றித் திருவையாறில் புல்லரித்துப் பாடும் ஆரியக் கூத்து ஆண்டுதோறும் நடந்தேறி வருகிறது.

இவர்களை இசை மும்மூர்த்திகள் என்று முன்னிறுத்தும் வட இந்திய வரலாற்றாளர்கள், அதுவே அவர்களுக்கு முன்பாக வாழ்ந்த தமிழ் இசைவாணர்கள் ஆன அருணாச்சலக் கவிராயர், முத்துத் தாண்டவர், மாரிமுத்தாப் பிள்ளை ஆகிய முற்றிலும் தமிழிசையை முன்னெடுத்த தமிழ் மும்மூர்த்திகளைப் பற்றி ஒரு சிறு குறிப்பும் கூடக் காட்டுவதில்லை. தமிழிசை மூவர், தமிழ் இசை மும்மூர்த்திகள், ஆதி மும்மூர்த்திகள் என்று அழைக்கப்படும் இவர்கள் தமிழிலேயே பாட்டெழுதி, தமிழிலேயே பாடித், தமிழிசையை வளர்த்த மாபெரும் இசைவாணர்கள் ஆவர். நீண்ட நெடிய மரபுடன் கூடிய இத் தமிழிசைதான் இந்திய இசைக்கும், கர்நாடக இசைக்கும் அடிப்படை.



தில்லைவிடங்கன் மாரிமுத்தாபிள்ளை | சீர்காழி அருணாசலக் கவிராயர் | சீர்காழி முத்துத்தாண்டவர்

தமிழிசை மூவர் இசைத்து வந்த பண்ணும், அலகும் சேர்ந்த தமிழ் இசைப் பாடலான "உருப்படி" என்னும் இசை வடிவம் தான், பின்னர் ராகம், தாளம் சேர்ந்த "கீர்த்தனை" என்றானது. உருப்படியின் உறுப்புகளான "எடுப்பு, தொடுப்பு, முடிப்பு" ஆகியவை "பல்லவி, அனுபல்லவி, சரணம்" என்று தற்போது வரை வழங்கப் பட்டு வருகின்றன. இதுதான் இந்திய இசை வரலாற்றில் தமிழுக்குக் கிடைத்திருக்கும் இடம்.

எல்லாமே தமிழில்தான் இருந்தன. இருக்கின்றன. ஆனால் இந்திய இசை என்பது "சாஸ்திரிய ஸங்கீதம்" என்று கூறுவதே தற்கால ஆரிய மமதை; அதை வழி மொழியும் தமிழர்களும் இருப்பதுதான் விந்தையும், வேதனையும்.

# சிறு நல் வாழ்க்கை

**முனைவர் தேமொழி**
*சான் ஃபிரான்சிஸ்கோ, அமெரிக்கா*



*வாழ்க்கை வாழ்வதற்கே என்று கூறினாலும் வாழும் ஒவ்வொரு மணித்துளியும் நாம் அதைப் பற்றிய நினைவின்றியே வாழ்கிறோம். வாழ, வாழ், வாழ்வு, வாழ்க, வாழிய, வாழ்த்து என்ற சொற்களின் வரிசையில் வாழ்க்கையும் இடம்பெறுகிறது. வாழ்க்கை என்பது ஒரு பழந்தமிழ்ச் சொல். சான்றுகளுடன் பார்க்கையில் குறைந்தது ஒரு 2500 ஆண்டுகளாக நம் புழக்கத்தில் வாழ்க்கை என்ற சொல் அவ்வாறே, அதே பொருளில் தொடர்ந்து வழக்கத்தில் இருப்பதை தமிழின் தொன்மையான முதல் நூலாகிய தொல்காப்பியம் மூலம் அறிய முடிகிறது.*

*புல்லா வாழ்க்கை வல்லாண் பக்கமும் - தொல்காப்பியம்-பொருள். புறத்:21/9*

*வறுமையிலும் செம்மையுடையவராக வாழும் வெற்றித் திறத்தினை புல்லா வாழ்க்கை வல்லாண் பக்கமும் என்பது இப்புறத் துறைச் சொற்றொடரின் பொருள் என இளம்பூரணர் விளக்கம் தருகிறார்.*

*தமிழின் செவ்வியல் இலக்கியமான சங்கப் பாடல்கள் என்ற பத்துப்பாட்டு எட்டுத்தொகை ஆகிய தொகை இலக்கியங்களில் வாழ்க்கை என்ற சொல் 62 முறை இடம் பெறுகிறது. அக்கால மக்களின் வாழ்க்கை முறை பற்றி பல செய்திகளையும் தருகிறது. உப்பு விற்கும் உமணர், பாடிப் பரிசில் பெரும் பாணர், வில் கொண்டு பகை ஒழிக்கும் மறவர் என பலரின் வாழ்க்கை குறித்த பாடல்களில் இடம் பெறுகிறது. அது மட்டுமின்றி விலங்குகள்,பறவைகள், தேனி வாழ்க்கை குறித்தும் பாடல்களில் இடம் பெறுகின்றது. தமிழர் அனைவரும் நன்கு அறிந்த "கொங்கு தேர் வாழ்க்கை அம் சிறை தும்பி" என்று மலர்கள் எல்லாம் சென்று தேன் உண்ணும் தேனீயின் வாழ்க்கையைக் குறிக்கும் குறுந்தொகைப் பாடலும் இந்த வரிசையில் அடங்கும்.*

*வாழப்படும் வாழ்க்கையின் தன்மை குறித்த சிந்தனையைத் தூண்டும் பல கருத்துகளும் இடம் பெறுகின்றன.*

*அவற்றுள்;*

*"ஒக்கல் வாழ்க்கை தட்கும் மா காலே" (புறநானூறு: 193/4)*

சுற்றத்தோடு கூடி வாழும் இல்வாழ்க்கை தப்பவிடாமல் காலைத் தடுக்கும், கட்டுப்படுத்தும் தன்மை கொண்டது

*"கவறு பெயர்த்து அன்ன நில்லா வாழ்க்கை" (நற்றிணை: 243/5)*

சூதாடுகருவியை உருட்டிவிட்டாற்போன்ற நிலையற்ற வாழ்க்கை

*"பொழில் வதி வேனில் பேர் எழில் வாழ்க்கை" (பதிற்றுப்பத்து: 48/15,16)*

சோலைகளில் தங்கியிருந்து செய்யும் வேனில் விழாவும் கொண்ட பெரிய அழகிய வாழ்க்கை .

*"பெருநீர் விளையுள் எம் சிறு நல் வாழ்க்கை" (நற்றிணை: 45/9,10)*

கடலுள் விளையும் பொருள்களை வைத்து வாழும் எம் சிறிய நல்ல வாழ்க்கை

போன்ற பாடல் வரிகள் வாழ்க்கை பற்றிய பல வேறு கோணங்களைக் காட்டுகின்றன.



**பேர் எழில் வாழ்க்கை:**

பதிற்றுப்பத்தின் ஐந்தாம் பத்து புலவர் பரணர் சேர அரசன் கடல் பிறக்கு ஓட்டிய செங்குட்டுவன் மீது பாடிய பாடல்களின் தொகுப்பு. அடிதொகுப்பின் 48 ஆவது பாடலில் பரணர் சேர மன்னனை நீடு வாழ்க என வாழ்த்துகிறார்.

*"பல் பொறி மார்ப நின் பெயர் வாழியரோ*

*நின் மலை பிறந்து நின் கடல் மண்டும்*

*மலி புனல் நிகழ்தரும் தீம் நீர் விழவின்*

*பொழில் வதி வேனில் பேர் எழில் வாழ்க்கை*

*மேவரு சுற்றமோடு உண்டு இனிது நுகரும்*

*தீம் புனல் ஆயம் ஆடும்*

*காஞ்சி அம் பெரும் துறை மணலினும் பலவே"*

*(பதிற்றுப்பத்து: 4, பரணர்)*




*மன்னா, உன்னை நாடிப் பாடிப் பரிசில் பெற வரும் பாணர்களும் விறலியர்களுக்கும் பொன்னால் செய்த தாமரைப் பூக்களையும், மாலைகளையும் சூட்டி அவர்களை மகிழவித்து, உன் புகழை நிலைநாட்ட கடலில் பகைவரோடு போரிட்டு வெற்றிபெற்ற, குளிர்ந்த துறைகளைக் கொண்ட பரதவனே! அவ்வாறு வென்று கொணர்ந்த பொருட்களை தனக்கென வைத்துக் கொள்ளாது புலவர்களின் ஒப்பற்றப் பாடல்களுக்குப் பரிசாக அளிப்பதால் கொடுப்பதை அன்றி தனக்கென வைத்துக்கொள்ளும் பண்பை அறியாதவன் இவன் என்று அவர்கள் போற்றிப் பாட, வேண்டியவர்க்கு மென்மையானவனாகவும், பகைவர்களுக்கு வன்மையானவாகவும் விளங்குபவனே. அவ்வாறு நீ போரில் பகைவரின் ஊர்களைச் சுடுகின்ற நெருப்பின் வெப்பத்தால் உன் மார்பில் சூடிய மாலையின் மலர்களும், பூசிய சந்தனமும் காய்ந்து போன புள்ளிகளைக் கொண்ட மார்பைக் கொண்டவனே உன் பெயர் நீடு வாழ்க.*

*உனது மலையில் பிறந்து, உனது கடலில் சென்று கலக்கும் மிகுந்த நீர் நிறைந்த ஆற்றில் நிகழ்த்தப்பெறும் இனிய நீராட்டு விழாவும்,*

*சோலைகளில் தங்கியிருந்து செய்யும் வேனில் விழாவும் கொண்ட உன் பெரிய அழகிய வாழ்க்கையில் உன்னை விரும்பிச் சூழ்ந்திருக்கும் சுற்றத்தாரோடு உண்டு, இனிமையாகத் துய்த்து, இனிய வெள்ளத்தில், மக்கள் கூட்டம் நீர்விளையாட்டு ஆடுகின்ற காஞ்சி என்னும் ஆற்றின் அழகிய, பெரிய துறையிலிருக்கும் மணலைக் காட்டிலும் பல ஆண்டுகள் நீ நீடூழி வாழ்வாயாக என்று பரணர் கடல் பிறக்கு ஓட்டிய செங்குட்டுவனை வாழ்த்திப் பாடுகிறார். இவ்வரிகள் மூலம் 'பேர் எழில் வாழ்க்கை' எத்தகையது என்பது புலனாகிறது. பலரும் போற்றும் வண்ணம் புகழ் பெற்று, எதிரிகளை வென்று, தன் உறவுடனும் நட்புடனும் விழாக்கள் கொண்டாடி வாழும் அரசரின் வாழ்வு ஒரு 'பேர் எழில் வாழ்க்கை' என்று காட்டப்படுகிறது.*

***சிறு நல் வாழ்க்கை:***

*அவ்வாறே சங்கப்பாடலில் 'சிறு நல் வாழ்க்கை' குறித்த ஒரு குறிப்பும் காணப்படுகிறது. இந்த வாழ்க்கை நெய்தல் நிலத்தின் சிறு குடியில் வாழும் பரதவர்களின் வாழ்க்கை. பழம்பெரும் நகரின் பெருஞ் செல்வந்தரின் மகன் ஒருவன், மீனவர் குடியில் வாழும் பெண் ஒருத்தி மேல் மையல் கொண்டு அவளை நாடி வருகிறான். அவனை இடைமறித்து அறிவுரை கூறுகிறாள் மீனவப் பெண்ணின் தோழி. அப்பொழுது தங்களின் எளிய சிறு நல் வாழ்க்கை அவனுக்கு ஒத்துவராதது என உணர்த்துகிறாள்.*

*"இவளே கானல் நண்ணிய காமர் சிறுகுடி*

*நீல் நிற பெரும் கடல் கலங்க உள் புக்கு*

*மீன் எறி பரதவர் மகளே நீயே*

*நெடும் கொடி நுடங்கும் நியம மூதூர்*

*கடும் தேர் செல்வன் காதல் மகனே*

*நிண சுறா அறுத்த உணக்கல் வேண்டி*

*இன புள் ஓப்பும் எமக்கு நலன் எவனோ*

*புலவு நாறுதும் செல நின்றீமோ*

*பெருநீர் விளையுள் எம் சிறு நல் வாழ்க்கை*

*நும்மொடு புரைவதோ அன்றே*

*எம்மனோரில் செம்மலும் உடைத்தே"*

*(நற்றிணை: 45, நெய்தல் பாடல் - ஆசிரியர் பெயர் தெரியவில்லை)*

இவளோ, கடற்கரைச் சோலையை அடுத்துள்ள மீனவர்களின் அழகிய சிறுகுடியில் வாழ்பவள். நீல நிறப் பெருங்கடல் கலங்குமாறு அதன் உள்ளே புகுந்து மீனைப் பிடிக்கும் பரதவர் மகள் இவள்! நீயோ, உயர்ந்த கொடிகள் அசையும் கடைத் தெருக்களைக் கொண்ட பழைய ஊரில் வாழும், விரைந்து செல்லும் தேர்களையுடைய ஒரு செல்வந்தரின் அன்புக்குரிய மகன் ஆவீர்! கொழுப்பு மிகுந்த சுறாமீனை அறுத்த துண்டங்களை உலர்த்தும் பொழுது கூட்டமாக வரும் பறவைகளை விரட்டும் எமக்கு உம் உயர்ந்த நலன்கள் என்ன வேண்டியுள்ளது? புலால் நாற்றம் வீசும் எம்மிடம் இருந்து தள்ளி நிற்பீர். பெரிய கடல் நீரில் விளையும் பொருட்களை வைத்து வாழும் எங்களின் சிறிய நல்ல வாழ்க்கை உங்களுக்குப் பொருத்தமற்றது.



எங்கள் பரதவர் குலத்திலும் இவளுக்குப் பொருத்தமான பண்பு நிறைந்த ஆண்மக்கள் உள்ளனர் என்று பரதவர் குலப் பெண்ணின் தோழி மூதூரில் வாழும் செல்வந்தனுக்கு நிலைமையைத் தெளிவாகக் கூறி அறிவுறுத்துகிறாள்.

இந்த இருவேறு பாடல்களையும் ஒப்பிடுவதன் மூலம் இருவேறு வாழ்க்கை முறையின் வேறுபாட்டைத் தெளிவாக அறிய முடியும். ஆரவாரத்துடன் வாழும் மன்னர்களின் பேர் எழில் வாழ்க்கையைப் போலன்றி, இப்பரதவர் வாழ்க்கை வறுமையிலும் செம்மையுடையதாக, தங்கள் எளிய வாழ்விலும் மனநிறைவு கொண்டு அமைதியுடன் வாழும் சிறுநல் வாழ்க்கையாக அமைந்துள்ளதைக் காணமுடிகிறது.

***உதவிய தளம்:***

*சங்கச் சோலை, முனைவர்.ப.பாண்டியராஜா - http://sangacholai.in/index.html*

# எம்ஜிஆர் திரைப்படப் பாடலில் மது விலக்கு அறிவுறுத்தல்

## *(சைதையாரின் எம்ஜிஆர் திரைப்படப் பாடல் நுண் ஆய்விருக்கை உரை)*

***- பாலகணேஷ், எழுத்தாளர்***



*தனக்கென்று பல கொள்கைகளை வைத்திருந்த எம்ஜிஆர், திரைப்படங்களின் கதைகளையும், காட்சிகளையும் தனக்கென வளைத்துக் கொள்ளும் விதமே அலாதியானது. அவரது நூறாவது படமான 'ஒளிவிளக்கு' 1968ம் ஆண்டில் ஜெமினி நிறுவனத் தயாரிப்பில் வெளியானது. 'பூல் அவுர் பத்தர்' என்ற இந்திப் படத்தின் மறு உருவாக்கம், சாணக்யா இயக்கியிருந்தார். படத்தில் கதை நாயகன் குடித்துவிட்டு ஒரு தவறு செய்கிறான் என்பது காட்சி. மது குடித்தல், சிகரெட் புகைத்தல் இவற்றைச் செய்வதில்லை, காட்சிப்படுத்துவதில்லை ஆகியவை எம்ஜிஆரின் கொள்கைகளில் சில. கதையோ நாயகன் மதுவருந்துவதைக் கோரியது. அப்படி அவர் செய்யாவிடில் அடுத்துவரும் காட்சிகளெல்லாம் பலமிழந்தவை ஆகிவிடும். என்ன செய்வது..?*

*அதற்கோர் அரிய வழியைக் கண்டுபிடித்தார் எம்ஜிஆர். மதுவருந்திவிட்டு அப்படி அருந்தியதற்காகத் தான் வருந்துவதாக ஒரு பாடல் காட்சியை அமைத்தார். குடியின் தீமைகளைப் பார்ப்பவர் உணரும் வகையிலான வார்த்தைகளை இன்னிசையில் கோர்க்கச் செய்து, கூடவே காட்சியின் அழகியலுக்கும் குறை வைக்காத வண்ணம் அந்தப் பாடலைப் படமாக்கச் செய்தார். எம்.எஸ்.விஸ்வநாதனின் இசையில் எம்ஜிஆரின் விருப்பத்துக்கேற்ற வரிகளை வாலி எழுதியிருந்தார். காட்சியமைப்பின்படி குடித்துவிட்டு வரும் எம்ஜிஆர் தரையில் விழ, அவர் மனசாட்சி கறுப்பு, சிவப்பு ஆடையில் பிரம்மாண்ட உருவத்துடன் எதிரில் நின்று, 'தைரியமாகச் சொல், நீ மனிதன் தானா?' என்று பாடுகிறது. இவர் குற்ற உணர்வுடன், 'இல்லை' என்றதும்,*

> *'நீதான் ஒரு மிருகம்,*
>
> *இந்த மதுவில் விழும் நேரம்.*
>
> *மனமும் நல்ல குணமும் உன் நினைவை விட்டு விலகும்'*

*என்று குற்றம் சாட்டுகிறது மனசாட்சி. பல்லவி இப்படித் துவங்குகிறது என்றால் அடுத்தடுத்த சரணங்களில் மனசாட்சி வெவ்வேறு ஆடைகள் அணிந்து*

*கதாநாயக எம்ஜிஆரைக் குற்றம் சாட்டுகின்றது. நான்கு விதமான மனசாட்சி எம்ஜிஆர்கள்- கதாநாயக எம்ஜிஆரைத் தவிரவும்.*

*எம்ஜிஆரின் திரைப்படங்களை அவதானித்திருந்தீர்கள் என்றால் ஒன்றை அறிய முடியும். தன்னை எப்படித் திரையில் அழகாகக் காட்டிக் கொள்வது என்பது எம்ஜிஆருக்குக் கைவந்த கலை. பிச்சைக்கார வேஷம் போட்டாலும், சரி, கிழவன் வேடத்தில் வந்தாலும் சரி, எந்த வேடமானாலும் அவரது தோற்றம் ரசிக்கும்படி இருக்கும். அப்படி, இந்தப் பாடலில் வரும் நான்குவிதமான எம்ஜிஆரின் தோற்றங்களும் கண்களை அள்ளும்.*




*கறுப்பு சிவப்பு ஆடையில் பிரம்மாண்டமாக உயர்ந்து நிற்கும் மனசாட்சி எம்ஜிஆரின் கைகள் குடித்திருக்கும் சாதாரண எம்ஜிஆரைப் பிடிக்க நெருங்க, அவர் அஞ்சி ஓடும் ஆரம்பக் காட்சியே 'எப்படித்தான் படமாக்கியிருப்பார்கள்?' என்ற பிரமிப்பில் ஆழ்த்திவிடும்.*

*வெள்ளை பேண்ட்டும், இளநீலச் சட்டையும் அணிந்து இப்போது தோன்றும் மனசாட்சி,*

*'மானைப் போல் மானம் என்றாய்*

*நடையில் மதயானை நீயே என்றாய்,*

*வேங்கை போல் வீரம் என்றாய்*

*அறிவில் உயர்வாகச் சொல்லிக் கொண்டாய்*

*மதுவால் விலங்கினும் கீழாய் நின்றாய்*

*தைரியமாகச் சொல் நீ மனிதன் தானா?'*

*என்று வார்த்தைச் சாட்டையால் அடிக்கும். இந்த வரிகளைப் பாடி முடிக்கையில் உயர்ந்து நிற்கும் மனசாட்சி, படிப்படியாகக் குறுகி சாதாரண வடிவத்திற்கு வரும் ஷாட் மற்றொரு 'எப்படித்தான் எடுத்தார்களோ?' என்கிற பிரமிப்பைப் பார்வையாளனுக்குள் கடத்தத் தவறாது.*

*அடுத்த மனசாட்சியோ சிவப்புப் பேண்ட்டும், வெள்ளைச் சட்டையும், சிவப்பு டையுமாக மது பாட்டிலினுள்ளிருந்தே தோன்றி, பாட்டில் மூடியின் மீது நடனமாடி, நாயகனை மீண்டும் குற்றம் சாட்டும்.*

*'அலையாடும் கடலைக் கண்டாய்;*

*குடித்துப் பழகாமல் ஆடக் கண்டாய்,*

*மலராடும் கொடியைக் கண்டாய்;*

*மதுவைப் பருகாமல் ஆடக் கண்டாய்-*

*நீயோ . . . மதுவாலே ஆட்டம் கண்டாய்.*

*தைரியமாகச் சொல் நீ மனிதன் தானா'*

*என்று கேலி பேசி, கதாநாயக எம்ஜிஆரைக் குறுகச் செய்யும்.*

*ஆயிற்றா..? அடுத்து வரும் வரிகளை எல்லா மனசாட்சிகளும் சேர்ந்து பாடிக் குற்றம் சாட்டும். அப்படியென்ன வைர வரிகள் அவை?*

*'பொருள் வேண்டித் திருடச் செல்வாய்,*

*பெண்ணைப் பெற வேண்டி விலையைச் சொல்வாய்,*

*துணிவோடு உயிரைக் கொல்வாய்,*

*எதற்கும் துணையாக மதுவைக் கொள்வாய்,*

*கேட்டால் . . . நான்தானே மனிதன்- என்பாய்'*

*இப்படி மாறி மாறி குடித்தவனை விளாசுகிற காட்சியில் கதாநாயக எம்ஜிஆருக்கு இரண்டு பக்கமும் இரண்டிரண்டு மனசாட்சிகள். ஆக, ஐந்து எம்ஜிஆர் ஒரே ஃப்ரேமில்.*

*பாடல் முடிகையில் ஒவ்வொரு மனசாட்சியும் மற்றொன்றோடு இணைந்து கடைசியில் அத்தனையும் கதாநாயக எம்ஜிஆருக்குள் அடைக்கலமாகும்.*

*மாஸ்க் முறையில் படமாக்கப்பட்டது என்பது இன்றைக்குத் தொழில்நுட்பத்தின் காரணமாக நமக்குத் தெரிந்திருக்கிறது என்றாலும், ஒரு சிறு பிசிறும் இல்லாத டைமிங்குடன் அக்காட்சியை நடித்த எம்ஜிஆரின் திறமைக்கு*




*இணையுண்டா..? ஒரு மனசாட்சி கையை உயர்த்திப் பாட, மற்றொரு மனசாட்சி நடனமாட, பிறிதொன்று எம்ஜிஆரையே முறைக்க... ஒரே ப்ரேமில் அத்தனை கேரக்டர்களுக்கும் மிகத் துல்லியமாக இருக்கும் எம்ஜிஆரின் டைமிங்.*

*இதுவரை படித்துவந்த நீங்கள் இப்போது அந்தப் பாடலை மீண்டும் ஒருமுறை பாருங்கள்... இசையும், காட்சியமைப்பும், இவற்றைக் காட்டிலும் அதிகமாக எம்ஜிஆரும் மனத்தில் நங்கூரமிட்டு நின்று விடுவார்கள். மதுவின் கொடுமையை விளக்க இந்த ஒரு பாடல்தான் எம்ஜிஆரிடமிருந்து வந்தது என்றில்லை, அனைத்துப் பாடல்களையும், அவற்றினுடைய கருத்தாழத்தையும் பட்டியலிட்டால், பக்கங்கள் பற்றாது இந்தப் புத்தகத்தில். ஆனாலும், ஒரேயொரு பாடலைக் குறிப்பிட்டே தீரவேண்டும். பாடல்களுக்காக எம்ஜிஆரை ஏன் கொண்டாட வேண்டும் என்பதற்கான காரணமும் இதன்மூலம் விளங்கிவிடும்.*

*1972ம் ஆண்டு ப. நீலகண்டன் இயக்கத்தில், எம்ஜிஆர், லட்சுமி, அசோகன், சோ ஆகியோரது நடிப்பில் வெளியான படம் 'சங்கே முழங்கு'. படத்தின் நாயகன் எம்ஜிஆரின் மீது தந்தையைக் கொன்றதாகக் கொலைப்பழி விழுந்திருக்க, தலைமறைவாகியிருப்பார். அந்நிலையிலேயே சர்தார்ஜியாக மாறுவேடமிட்டு ஐபிஎஸ் படித்து போலீஸ் அதிகாரியாகியிருப்பார். அசலான கொலைகாரன்*

அசோகனை ஆதாரத்துடன் பிடிப்பதற்காக அவருடைய நண்பராகப் பழகுவார். இந்நிலையில் அசோகன் அவருக்கு ஒரு மதுவிருந்து தருவதாக அழைக்க, காட்சியில் எம்ஜிஆர் குடித்திருக்க வேண்டும். குடித்துவிட்டுப் பாட வேண்டும். அது ஒரு குறைந்த உடை நடனப்பெண் ஆடும் பாடல் காட்சியாக வேறு திட்டமிடப்பட்டிருந்தது.

பாடலை எழுதுவதற்காக வாலியைக் கேட்டிருப்பதாக எம்எஸ்வி சொன்னார். "வாலி வேண்டாம், கண்ணதாசனை எழுதச் சொல்லுங்கள். வாலிகிட்ட நான் பேசிக்கறேன்." என்றிருக்கிறார் எம்ஜிஆர். அவர் விருப்பப்படி கண்ணதாசன் வரவழைக்கப்பட்டார். காட்சி அவருக்கு விளக்கப்பட்டது. அருகிலிருந்த எம்ஜிஆர், "குடிச்சுட்டுப் பாடற பாட்டுன்னாலும் குடிபோதைக்கு எதிரானதா பாட்டு அமையணும் கவிஞரே." என்று கண்டிஷன் போட்டிருக்கிறார். கண்ணதாசன் கடகடவெனப் பாடல் வரிகளைச் சொல்ல, அனைவரும் கைதட்டிப் பாராட்டியிருக்கிறார்கள். "இப்ப புரிஞ்சுதா நான் ஏன் கண்ணதாசனை பாட்டெழுதச் சொன்னேன்னு. குடிபோதைக்கு எதிராப் பாட்டு எழுத, அதைப் பூரணமா உணர்ந்த அவராலதான் முடியும்" என்று எம்ஜிஆர் சொல்ல, அனைவருக்கும் பிரமிப்பு. இப்படி ஆட்டப் பாடலிலும்கூட ஏதாவது நல்ல விஷயத்தைச் சொல்ல வேண்டும் என்று நினைத்த கதாநாயகன் எம்ஜிஆருக்கு முன்பும் இல்லை, பின்பும் இல்லை. இனி வரவும் வாய்ப்பில்லை.

அட்டகாசமான இசை ஆரம்பமாக, நடனப் பெண் சுற்றிச் சுழன்று ஆட, மதுவை ஊற்றித் தரும் அசோகனிடம், அதைக் குடித்தது போல் நடித்து, பூ ஜாடியில் ஊற்றிவிடுவார் எம்ஜிஆர். அந்தப் பெண் ஆடியபடியே நெருங்கிவர, பாடல் ஆரம்பமாகும்.

'சிலர் குடிப்பது போலே நடிப்பார்' என்று பெண்குரல் துவங்க,

'சிலர் நடிப்பது போலே குடிப்பார்' என்று எம்ஜிஆர் தொடர்வார்.

'சிலர் பாட்டில் மயங்குவார்' என்று அவள் பாட,

'சிலர் பாட்டிலில் மயங்குவார்' என்பார் எம்ஜிஆர்.

தொடர்ந்து வரும் சரணங்கள்கூட அந்தப் பெண் ஒருவரி பாட, அதற்கு எம்ஜிஆர் பதிலளிப்பதுபோல் அடுத்த வரி பாடுவதாகத்தான் அமைந்திருக்கும். அவர் பதிலளிக்கும் வரிகள் ஒவ்வொன்றும் குடிப்பதன் அவலத்தை பளீரென எடுத்துரைக்கும் வரிகள் என்பதுதான் பாடலின் சிறப்பியல்பு. முதல் சரணத்தைப் பாருங்கள்.

மதுவுக்கு ஏது ரகசியம்?

*அந்த மயக்கத்தில் எல்லாம் அவசரம்*
*மதுவில் விழுந்தவன் வார்த்தையை*
*மறுநாள் கேட்பது அவசியம்.*

*இந்த முதல் சரணம் முடிந்த கையோடு, சுத்தமான கர்நாடக ராக ஸ்வரங்களை எம்எஸ்வி- மூலம் இடம்பெறச் செய்திருப்பார் எம்ஜிஆர். வேறு எந்த நாயகனின் படத்திலும் எந்த ஆட்டப் பாடலிலும் இத்தகைய ஸ்ருதி சுத்தமான ராக ஆலாபனையை நீங்கள் கேட்கவே இயலாது என்பது எம்ஜிஆரின் தனித்தன்மை. அந்த ஆலாபனைக்கு முத்தாய்ப்பாக, அதே ஸ்வரத்தில்;*

*'அவர் இவர் எனும் மொழி*

*அவன் இவன் என வருமே'*

*என்று எம்ஜிஆர் பாடுவது கண்ணதாசனின் முத்திரை.*




*குடிகாரன் எப்படிப்பட்டவன் என்பதை முதல் சரணம் சொல்லிவிட்டதா? குடியைப் பற்றிச் சொல்லும் அடுத்த சரணம்.*

*'நாணமில்லை, வெட்கம் இல்லை போதை ஏறும்போது'*

*'நல்லவனும் தீயவனே கோப்பை ஏந்தும்போது'*

*இந்த இரண்டாவது சரணத்தைவிடப் பளீரென்று மதுவின் குணத்தை எடுத்துரைக்க வேறேதும் வார்த்தைகள் இருக்கின்றனவா என்ன?*

'மது தரும் போதையை வேறு என்ன தந்துவிடும் ஐயா? இவர் பாட்டுக்கு இப்படிப் பாடறாரே' என்று குடித்துப் பழகிய எவருக்கேனும் தோன்றக்கூடும் என்பதை ஊகித்தவராய் அடுத்த சரணத்தை எழுதியிருக்கிறார் கண்ணதாசன். இப்படித் தொடரும் அது;

'புகழிலும் போதை இல்லையோ?

பிள்ளை மழலையில் போதை இல்லையோ?'

'காதலில் போதை இல்லையோ?

நெஞ்சின் கருணையில் போதை இல்லையோ?'

இவற்றினாலும் மனித மனத்துக்குப் போதை கிடைக்கின்ற பட்சத்தில் ஏன் அந்த மதுவைத் தேடவேண்டும் என்று சாட்டை சொடுக்கிய கையோடு, அடுத்து வரும் வரிகள் எம்ஜிஆருக்காகவே அவரது குணாதிசயத்திற்காகவே சிறப்பாக எழுதப்பட்ட வரிகள். வில்லன் அசோகனிடம் ஆடியபடியே நெருங்கியிருக்கும் எம்ஜிஆர் அவரின் தோளில் தட்டிப் பாடுவார் :



'நீ நினைக்கும் போதை வரும் -நன்மை செய்து பாரு.

நிம்மதியைத் தேடி நின்றால் -உண்மை சொல்லிப் பாரு'

வில்லனுக்கும் மதுக்கூடத்தில், ஆட்டப் பாடலில் புத்தி சொல்கிற கதாநாயகனும் வேறு எவரும் இருக்க முடியாது. அதற்கான தகுதி பெற்றவரும் எவரும் இலர்.

நடிகனுக்கும் சமூகப் பொறுப்பு உண்டு. திரைப்படங்கள் மூலமாக நல்ல கருத்துக்களை மட்டுமே சொல்ல வேண்டும் என்கிற எம்ஜிஆரின் உயர்ந்த எண்ணம்தான் அவரைத் திரையுலகின் முடிசூடா மன்னனாக இருக்க வைத்தது,

*மக்கள் மனங்களில் குடியமர்த்தியது. ஏன்... பின்னாளில் முதல்வராகவும் ஆக்கியது என்றால் அதில் சற்றும் மிகையில்லை.*

# *தமிழ் இலக்கியங்கள் கூறும் வாழ்வியல் சிந்தனைகள்- 11*

## *(கம்பன் காட்டும் இயற்கையின் எழிற்கோலக் குடும்பக் காட்சி)*



***மு. பழநிச்சாமி***
*நாகமலை, மதுரை-19*
*மின்னஞ்சல் : vmps834@gmail.com*

*எங்கு பார்த்தாலும் பசுமை; நீர் வளமும் நில வளமும் செழித்தோங்கித் திகழும் பரந்துபட்ட நிலப்பரப்பு அது. அதன் இடையில் கண் கொள்ளாக் காட்சியாக அற்புதமான ஓர் அழகிய தாமரைத் தடாகம். நீர் நிறைந்து ததும்பி நிற்கும் அந்தத் தடாகத்தில் தாமரை மலர்கள் மலர்ந்து மேலும் அழகை அள்ளி வழங்கிக் கொண்டிருக்கின்றன.*

*அந்தத் தடாகத்தில் அன்னங்களும், அழகிய மீன்களும், தவளைகளும், பிற உயிரினங்களும் மேவி வாழ்கின்றன. நீர் அருந்தவரும் பறவைகளும் விலங்கினங்களும் அன்றன்று அவ்வப்பொழுது அந்தப் பொய்கைக்கு வந்து போகும் வாடிக்கையாளர்கள்.*

*இந்தப் பொய்கையில் பூத்திருக்கும் தாமரை மலர்களின் மெத்தென்ற பஞ்சணையில் அன்னங்கள் தங்கள் இளங் குஞ்சுகளைச் சுகமாகப் படுத்துத் தூங்கவைத்துவிட்டு அக் குளக்கரைப் பகுதியை அடுத்துள்ள பகுதிகளில் உல்லாசமாக உலவிக் கொண்டிருக்கின்றன. (மாலுண்ட நளினப் பள்ளி வளர்த்திய மழலைப் பிள்ளை என்பது பாடலின் இரண்டாவது அடி. நளினம் - தாமரை) அவ்வாறு உலவுவதற்கும் அந்த அன்னங்களுக்கு ஓர் உள்நோக்கம் உண்டு.*

*சேல் மீன்களை யொத்துப் பிறளும் கண்களைக் கொண்ட இப்பகுதிவாழ் இளம் மகளிரின் அழகிய நடை போல நடந்து பழக வேண்டும் என்ற எண்ணத்துடன் அங்கும் இங்கும் அலைந்து திரிந்து நடை பழகி வந்ததாம். மங்கையரின் மென்மையான அழகிய நடைக்கு ஒய்யாரமாக ஒல்கி ஒசிந்து நடக்கும் அன்னத்தின் நடையை உவமித்துச் சொல்வது பரவலாகப் பயிலப்பட்டுவரும் மரபு.*

*ஆனால் இங்கே எதிர்நிலை உவமையாக 'மகளிர் போல நடை பயிலும் அன்னம்' எனப் புரட்டிப் போட்டுப் பேசுகிறான் கவிஞன். அவ்வாறு சொல்வதற்குப் பின்னுள்ள பொருளென்ன? அந்நாட்டு நங்கையரின் நடையமைதியும், விழியழகும், எழில்நலனும், எத்துணை கொள்ளை அழகு என்பதைக் காட்டுவதற்காகத்தான் இப்படி உவமையை மாற்றிப் போட்டுப் பேசி உய்த்துணர வைக்கிறான் கவிஞன். கம்பன் படைத்து வழங்கிய இப் பாடலின் முதல் அடி இது.*

*"சேலுண்ட ஒண்கணாரில் திரிகின்ற செங்கால் அன்னம்"*

*["சேல்" - கெண்டை மீன். உருட்சியும் பிறழ்ச்சியும் கொண்டு ஒரு நிலையில் நில்லாமல் உலாவிவரும் இயல்பினது. எனவே இது மகளிரின் கண்களுக்கு ஒப்பானது.*



*"உண்ட" - என்றது அந்தக் கெண்டை மீனையும் வென்று விளங்கித் திகழும் மகளிரின் கண்களை. ஒண்கண் - ஒளி பொருந்திய கண்கள்.*

*"திரிகின்ற"- சேல் ஒத்த கண்களையுடைய கன்னியரின் கால் ஒத்த நடையினை, தான் அடைய விரும்பி அன்னம், அங்கும் இங்கும் அலைந்து திரிந்து நடை பழகி வந்தது என்பதைக் காட்ட வந்த ஒப்பற்ற சொல்.*

*"செங்கால் அன்னம் "- மேலெல்லாம் வெண்ணிறம் உடையதாய் கால் சிவந்திருக்கும். ஆதலால் 'செங்கால் அன்னம்' என வந்தது.]*

***காட்சி மாற்றம்:***

*அந்த அன்னங்கள் அங்கு ஒய்யாரமாக உலவிக் கொண்டிருக்கும் பொழுது இங்கே பொய்கையில் நீர் பருக வருகிறது, ஓர் எருமை. பொய்கையின் அடிப்பகுதி எல்லாம் நீடு சேர்ந்து குழைவான சேற்றுக் குழம்பு. அதில் இறங்கிய, கனத்த எருமையின் கால், அந்தச் சேற்றுப் பகுதியில் படிந்து சற்று இறங்கிக் கொண்டது. எருமை இறங்கியதால், நீரெல்லாம் கலங்கி, சின்னதாய் அலை வீசி அடிக்கிறது.*



*இந்த அதிர்வலைகளால், துயில் கலைந்த அன்னக் குஞ்சுகள், கண் திறந்து தாயைத் தேடுகின்றன. ஆனால் எதிரிலோ கன்னங்கருத்த மலை போன்ற எருமை. துணுக்குற்று அலறிப்புடைத்து, மழலைக் குரலில் ஓலமிடுகின்றன அன்னக் குஞ்சுகள். இந்த அன்னக் குஞ்சுகளின் அலறல், எருமைக்குப் பசியுடன் ஊரில் இருக்கும் தன் இளங் கன்றை நினைத்துக் கனைக்கும் குரலாகி ஒலிக்கிறது.*

*கனைக்கும் அந்தத் தாய்மையுணர்வால், எருமையின் மடியிலிருந்து, பால் சுரந்து பீச்சியடிக்கிறது. அந்தப் பாலை, அருகே இருந்த அன்னக் குஞ்சுகள் பருகி மகிழ்ந்து, வயிறு நிரம்பியமையால் உண்ட மயக்கத்தில் தூங்க நேர்கின்றன. அந்தத் தூக்கத்திற்குத் துணையாக, தாமரையின் கீழ்வாழும் தேரைகளின் இன்னோசை க் குரல்:*

*"கண்ணே !*

*உறங்கு! உறங்கு!!*

*கற்பகமே ! நித்திரை போ!!"*

*என்று பாடித் தாலாட்டுவது போன்ற தாலாட்டாய் அமைகிறது. அந்தத் தாலாட்டு இசையில், மெய் மறந்து உறங்குகின்றன இந்த அன்னக் குஞ்சுகள். இப்பொழுது முழுப் பாடலையும் பார்ப்போம்.*

*''சேலுண்ட ஒண்கணாரில்*
*திரிகின்ற செங்கால் அன்னம்*
*மாலுண்ட நளினப் பள்ளி*
*வளர்த்திய மழலைப் பிள்ளை*
*காலுண்ட சேற்றுமேதி*
*கன்றுள்ளிக் கனைப்பச் சேர்ந்த*
*பாலுண்டு துயிலப் பச்சைத்*
*தேரை தாலாட்டும் – பண்ணை''*

***மீண்டுமொரு மீள்பார்வை:***

*வளமார்ந்த பொய்கை, அதில் படியும் ஒய்யாரமான அன்னங்கள், அதன் குஞ்சுகள், சேற்றைக் கலக்கும் எருமை, அதன் கன்று, சேர்ந்து சப்திக்கும் தவளைகள், என அனைத்துமே இயற்கையோடிணைந்த பொருட்கள்தான். வேறுபட்டுச் சிதறிக் கிடக்கும் இவற்றைத் தேர்ந்தெடுத்து இணைப்பதில்தான் கவிஞனின் கற்பனைச் சிறப்பு மேலோங்கி மிளிரும்.*

*வானில் பறக்கும் பறவை ஓரினம் (அன்னம்)*

*நிலத்தில் வாழும் விலங்கு வேறொரினம் (எருமை)*

*நீரிலும் நிலத்திலும் வாழும் தேரை - இன்னோரினம் (தவளை)*

*விலங்கினம் பறவையினத்திற்குப் பாலூட்ட, இடைப்பட்ட தேரை தாலாட்ட; மூவினமும் ஒன்றாகி இணையும் எழிற்காட்சியைக் காட்டி, எல்லா உயிரினங்களும் இணைந்து, "யாவரும் கேளிர்" என ஒன்றி உடனாகிக் கலந்து வாழவேண்டும், 'எத்துணையும் பேதமுறாது எவ்வுயிரும் தம்முயிர்போல் ' எண்ணி, பகையின்றி இணைந்து வாழவேண்டும் எனும் உயர்ந்த தத்துவம் ஆன்மநேய ஒருமைப்பாட்டுணர்வாகி இங்கு ஓங்கி ஒலிப்பதைக் கேட்கலாம். அன்னம் தன் குஞ்சுகளை மெத்தென மிளிரும் தாமரை மலர்த் தொட்டிலிலிட்டுத் தூங்கவைத்திருக்கும் தாய்மைச் செயல் தலைமை பெற்றுத்*

*திகழ; ஈன்ற தாயாகிய அன்னம் எங்கோ உலாவப்போக; நீர் அருந்த வந்த எருமை பாலூட்டும் தாயாக மாற; தாலாட்டும் தவளை செவிலித் தாயாகிப் பேண; இவ்வாறான அன்பின் ஆட்சியே ஆட்சியாக பாசமும் நேசமும் பொருந்தி அமையும் குடித்தனப் பாங்கும் குடும்பக் காட்சியும் என்னைப் பார்! பார்! எனக் கூவியழைத்துக் காட்டும் காட்சியையும் இப் பாடலில் பார்க்கலாம்.*



*இறக்கை கட்டிப் பறக்கும் கற்பனை என்னும் களியாட்டக்கூறு இயற்கையை இயல்புப் பின்புலமாகப் பார்க்கிறது. உயிர்களோடும் உணர்ச்சிகளோடும் ஊடாடி பாத்திரப் பண்பை வெளிப்படுத்தும் இயைபுப் பாலமாகி ஏற்றம் கொள்கிறது. உணர்ச்சிப் பாங்கும் உயிரோட்டமும் ஒன்றுபட்டுக் கலக்கும் அடிப்படைக் களமாக அதை ஆக்கிக்கொள்கிறது.*

*'நளினப் பள்ளி', 'மழலைப் பிள்ளை' போன்ற வளஞ்சர்ந்த சொற்களாலும், 'சேலுண்ட ஒண்கணார்', 'மாலுண்ட நளினப்பள்ளி' 'காலுண்ட சேற்றுமேதி', 'பாலுண்டு துயில' என்பன போன்ற சுவையான சொற்சேர்க்கைகளாலும் அழகுறுத்தி இயல்பான இயற்கையை எழிலான இயற்கையாக, தன் கற்பனையால், உருவேற்றிக் காட்டிவிடுகிறான் கவிஞன்.*

*அத்தோடு இயற்கையின் இயல்பான தன்மைகளை எடுத்துச் சொல்லும் பொழுது, கூடவே தன் இதயக் கருத்துக்களை, அதன் ஊடிழையாக ஆக்கி வைத்து விடுகிறான்.*

*இவன்தான் - கவிஞன்;*

*இவன்தான் - சிருஷ்டிகர்த்தா.*

# செ.இராஜேஸ்வரியின் முத்தமிழ் விரும்பி கவிதை மொழிபெயர்ப்புகள்

***(உன்னோடு உரையாடுதல் & காதல் மொழி)***

**பேரா. மு. முத்துவேலு,**
*தமிழ் பேராசிரியர் மாநிலக்கல்லூரி.*
*உறுப்பினர், மாநிலச் சட்ட ஆட்சிமொழி ஆணையம்,*
*சென்னை.*



*கவிஞர் முத்தமிழ் விரும்பியின் ஒன்பது கவிதைத் தொகுதிகளைப் பேராசிரியர் முனைவர் ராஜேஸ்வரி அவர்கள் மொழிபெயர்த்துள்ளார். அவரது மொழிபெயர்ப்புகளின் சிறப்புக் கூறுகளை வெளிப்படுத்துவது இக்கட்டுரையின் நோக்கமாகும்.*

## ***முத்தமிழ் விரும்பியும் காதலும்:***

*முத்தமிழ் விரும்பி என்ற பெயர் சூட்டிக் கொண்டிருக்கும் இவருக்குக் காதல் கவிதைகளில் ஈர்ப்பு இருப்பதில் வியப்பு இல்லை. ஏனெனில் தமிழ் என்றாலே சங்கக் காலத்தில் காதல் (களவு) என்று தான் பொருள் கொள்ளப்பட்டது.*

*தமிழைக் கற்க வேண்டும் என்று வந்து வேண்டி நின்ற ஆரிய மன்னன் பிரகதத்தன் என்பவனுக்கு சங்கப் புலவர் கபிலர் தமிழின் அன்பின் ஐந்திணைகளில் ஒன்றான குறிஞ்சித் திணையில் அறத்தோடு நிற்றல் என்னும் அழகிய அகத்துறையில் குறிஞ்சிப்பாட்டைப் பாடினார். இப்பாட்டுத் தலைவன் தலைவிக்குள் எழுந்த காதல் உணர்வை வெளிப்படுத்தும் பாடல். தமிழ் எனில் காதலாகும் போது முத்தமிழ் விரும்பியின் பாடல்களில் காதல் சுவை நனி சொட்டச் சொட்ட அமைந்திருப்பது மிகவும் பொருத்தம் உடையதாகும்.*

*மூலக் கவிதை நயம் கவிஞர் முத்தமிழ் விரும்பியின் கவிதைகளை ஆங்கிலத்தில் படித்துப் பார்ப்பதற்கு முன்னால் அக்கவிதைகளைத் தமிழில் படித்தேன். ஒன்றின் மொழிபெயர்ப்பினைப் படிப்பதற்கு முன்னால் அதன் மூலத்தைப் படித்துப் பார்ப்பது என்ற வகையில் மூலக் கவிதைகளைப் படித்தேன். படித்து முடித்ததும் நான் வியந்து போனேன். அவரது கவிதைகளை முதன் முதலில் படிக்கும் உணர்வினால் என் வியப்பு பல மடங்கு உயர்ந்தது. முத்தமிழ் விரும்பியின் கவிதைகளில் அழகும் அழுத்தமும் செறிவும் செம்மையும் படிப்பவர் மனத்தில் ஆழமாகப் பதிந்து விடும். இவரது*

கவிதைகளைப் பற்றி பாரதியார் பல்கலைக்கழகத்தின் மேனாள் பேராசிரியர் மறைந்த திரு ஞானசேகரன் அவர்கள் கூறியுள்ள சொற்கள் மிகவும் ஆழமானவை. 'முத்தமிழ் விரும்பியின் கவிதைகள் தமிழ்க் கவிதை மரபுக்குப் புதிய கதையாடல்' என்று அவர் பொருத்தமாகப் பதிவு செய்திருக்கிறார்.

நான்கு அடிகளில் அமைந்த கவிதை பல. இக்கவிதைகளில் சொல்லுக்குச் சொல் அமைந்திருக்கும் பொருள் சுவையாலும் ஒரு சொல்லுக்கும் இன்னொரு சொல்லுக்கும் இடையில் மறைந்திருக்கும் பொருளாழத்தினாலும் இதற்கும் மேலாக இரண்டு சொற்களைக் கூறி அவற்றிலிருந்து இவர் சொல்லாமல் சுட்டி இருக்கும் பொருளின் ஆழத்தினாலும் கவிதைச்

சுவை பெரும் வியப்பளிக்கிறது. இத்தகைய கவிதை நடை கவிஞர் முத்தமிழ் விரும்பியின் தனிக்கவிதை நடையாகும்.

புதுக்கவிதை மரபுக்குள் இவரது கவிதை புதிய மரபினை தோற்றுவித்துள்ளது. இதனை முத்தமிழ் விரும்பியின் கவிதை நடை என்று அழைப்பதும் பொருத்தமுடையதாகும்.

**மொழிபெயர்ப்பாளரும் மொழிபெயர்ப்பும்:**

முத்தமிழ் விரும்பியின் ஒன்பது கவிதைத் தொகுதிகளை முனைவர் ராஜேஸ்வரி அவர்கள் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துள்ளார். இக்கவிதைகளில் திறனாய்வு செய்து நான்கு நூல்களை வெளியிட்டுள்ளார். காதல் மொழி, உன்னோடு உரையாடுதல் ஆகிய இரண்டு நூல்களை அம்மையார் சிறப்பாக மொழி பெயர்த்துள்ளார். இக்கட்டுரை இவ் விரண்டு நூல்களின் மொழிபெயர்ப்புகளை ஆராய்கிறது. இவர் ஆங்கிலத்திலும் அருள் தமிழிலும் ஆற்றலும் ஆளுமையும் உடையவர். இவர் நாற்பதுக்கும் மேற்பட்ட நூல்களை ஆங்கிலத்திலிருந்து தமிழுக்கும் தமிழிலிருந்து ஆங்கிலத்திற்கும் மொழிபெயர்த்த சிறப்பினை உடையவர். இவர் தமிழும் ஆங்கிலமும் தெரிந்த ஒரு சில தமிழ்ப் பேராசிரியர்களில் ஒருவராகத் திகழ்கிறார்.


கவிஞர் பொறிஞர் முத்தமிழ் விரும்பி




**மொழிபெயர்ப்பும் கவிதை மொழிபெயர்ப்பும்:**

மொழிபெயர்ப்புப் பணியில் கவிதை மொழிபெயர்ப்புக் கடினமானது. உரைநடையில் அமையும் சிறுகதையை மொழிபெயர்ப்பது எளிது. நாவலை மொழிபெயர்ப்பதும் எளிதுதான். அறிவியல் மொழிபெயர்ப்புப் பயிற்சி இருந்தால் சிறப்பாக அமைந்துவிடும். சட்ட மொழிபெயர்ப்பு, சிறப்பு வகை மொழிபெயர்ப்பாக இருப்பதால் இது கடினம் தான். அடுத்து கவிதை மொழி பெயர்ப்பாளர்களுக்கு இரண்டு முக்கிய தகுதிகள் இருக்க வேண்டும். ஒன்று, மூலமொழியில் தேர்ச்சியும் இலக்கு மொழியில் புலமையும் பயிற்சியும் இருக்க வேண்டும். இந்தக் கவிதை நூலைப் பொறுத்தவரையில் மூலமொழியான தமிழில் மொழிபெயர்ப்பாளர் நல்ல தேர்ச்சி உடையவர். தமிழில் முதுகலை, ஆய்வு நிறைஞர் மற்றும் முனைவர் பட்டம் பெற்றவர். தமிழில் பல நூல்களை எழுதியவர். ஆங்கிலத்திலும் பயிற்சி பெற்றவர். பல நூல்களை ஆங்கிலத்திலிருந்து தமிழுக்கும் தமிழிலிருந்து ஆங்கிலத்திற்கும் ஆக்கித் தந்திருப்பது இதற்கு மற்றொன்று சான்று.

கவிதையை மொழிபெயர்க்கும் ஒரு மொழிபெயர்ப்பாளர் ஒரு கவிஞராக இருக்க வேண்டும். இம்மொழிபெயர்ப்பாளர் ஒரு கவிஞராகவும் இருப்பதால் இந்த மொழிபெயர்ப்பு, சிறப்பாக அமைந்துள்ளது.

**கவிதைத் தலைப்பும் மொழிபெயர்ப்பும்:**

மொழிபெயர்ப்பாளரின் மொழிபெயர்ப்பினை இரு நிலைகளில் நின்று நோக்கலாம். முதல் நிலை மூலக் கவிதைகளுக்குத் தமிழ்க் கவிஞர் தந்திருக்கும் தலைப்புகளை இவர் எப்படி மொழிபெயர்த்துள்ளார் என்பதாகும். இரண்டாவதாக, கவிதை வரிகளை மொழிபெயர்த்திருக்கும் திறன் பற்றி ஆய்வதாகும். தமிழ்க் கவிதைகளைத் தொகுத்துத் தலைப்பிட்டு இவர் தன் சந்திரோதயம் பதிப்பகம் மூலமாக வெளியிட்டுள்ளார். இவர் தமிழ்க் கவிதைகளுக்குத் தந்த தலைப்புகளை அப்படியே ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துள்ளார் அவற்றிற்கு சில எடுத்துக்காட்டுகள்;

*தமிழ் (ஆங்கிலம்)*

*நவீன சித்திரம் (*modern art)

*மௌனம் ஆதி மொழி (*Silence - the primitive language)

*தவிர்க்கப்பட்ட முத்தங்கள் (*Avoided kisses)

*ஒரு புன்னகை போதும் (*A smile is enough)

*வேறு சில கவிதைகளுக்குத் தமிழ்த் தலைப்பை மொழிபெயர்க்காமல் அக்கவிதைகளில் காணப்படும் உயிரோட்டமுள்ள ஒரு சொல் அல்லது வரியைத் தேர்ந்தெடுத்து அதனை தலைப்பாகத் தந்திருக்கிறார்.*

***அவற்றிற்கு சில எடுத்துக்காட்டுகள்:***

*வாழ்வதென்ன நோவு (Falling down), மார்கழிப் பனி வெளியில் (Nerunkiya blossoms), கை உதறி மெய் பதறி (Searching For), நித்திய மலர் என்ற தலைப்புடைய கவிதைக்கு (My script as your shield) என்று தலைப்பிட்டு இருப்பது சுட்டிக்காட்டத்தக்கது. அக்கவிதையில்*

*'எனது லிபிகளை*

*உனது கேடயங்கள் ஆக்குகிறாய்'*

*என வரும் தொடரைத் தனது மொழிபெயர்ப்பின் தலைப்பாகக் கொடுத்திருக்கிறார்.*

*காலக் கணிதம் என்ற தலைப்பை மொழிபெயர்ப்பாளர் Along with many என்று ஆக்கித் தந்துள்ளார். வெறுமையை உள்ளத்தின் ஏக்கத்தை உணர்த்துகின்ற கவிதை இது.*



மொழிபெயர்ப்பாளர்
முனைவர் திருமதி செ. இராஜேஸ்வரி

**Along with many**

Along with many

Ten, eleven and twelve

the numerical figure

does not matter

the well

drained with dry soil

and from the collapsed house exits

a loud noise

time's calculations

beyond the hands reach.

என்ற மொழிபெயர்ப்பில் மூலக் கவிதையின் சுவை குன்றாமல் குறையாமல் வடித்துத் தந்துள்ளார்.

'மார்கழிப் பனி வெளியில்' என்ற கவிதைத் தலைப்பிற்குப் பதிலாக அக்கவிதையில் வரும் நெருஞ்சி தழைத்திருக்கும் என்ற சொல்லின் அழகை எடுத்துரைக்க மொழிபெயர்ப்பாளர் Nerunji blossoms என்று அதனையே கவிதைக்குத் தலைப்பாக வைத்துள்ளார். இதைப் போலவே மொழிபெயர்ப்பாளரின் உள்ளம் கவர்ந்த சொல்லைத் தேர்ந்தெடுத்து அச்சொல்லின் வழி அக் கவிதைக்குள் படிப்பவரை இட்டுச் செல்ல வேண்டும் என்ற நோக்கில் இவர் தந்திருக்கும் தலைப்பு அமைந்துள்ளது.

அடுத்ததாக, கவிதைகளின் மொழிபெயர்ப்பில் மொழிபெயர்ப்பாளரின் உத்திகளைக் காணலாம். காதல் மொழி என்ற தொகுதியில் உள்ள வாழ்வமுதம் தா என்ற கவிதை




'இற்றைத்தனத்தின்

இடர் களைய

வாயமுதம் அல்ல

கண்ணே

வாழ்வமுதம் தா'

என வருகிறது. இதனை;

Oh dear

relieve me

from the suffering

of this moment

- so painful

don't want

an ambrosial kiss

gift me

an Ambrosial life.

என்று மொழிபெயர்த்து இருக்கிறார்.

மூலக் கவிதையின் அழகை மொழிபெயர்ப்பில் வடித்துத் தந்திருக்கும் இவர், மொழிபெயர்ப்பில் அந்த அழகிற்கு மேலும் அழகு ஊட்டி இருக்கிறார். கவிஞர் வாழ்வமுதம் தா என்று பாடியிருப்பதை இவர் பரிசாகத் தா என்று அமைத்திருக்கிறார். ஆம் give me என்று மொழிபெயர்க்காமல் gift me என்றது மொழிபெயர்ப்பாளரின் படைப்பாற்றலுக்கு எடுத்துக்காட்டாக அமைகிறது.

பெரும் காதலின் பேரன்பு என்னும் கவிதையை மொழிபெயர்ப்பாளர் Try to endure a bit என்ற தலைப்பிட்டு மொழிபெயர்த்துள்ளார்.

பெருங்காதலின் அவதியினால்

மிகவும் நெருங்கி

அதீத நெருக்கமும்/

எல்லையற்ற அழுத்தமும்/

ஈடுபாடும் காட்டுவதை/

சற்றுத் தாங்கித்தான் பாரேன்

பெருங் காதலின் பேரன்பின்றி/

வேறில்லையடி




என்பதில் வரும் 'சற்று தாங்கித்தான் பாரேன்' என்னும் தொடரை எடுத்து Try to endure me என்று அந்தக் கவிதையின் உயிர்ப்பான தொடரைத் தலைப்பாக்கியுள்ளார். இதில் வரும் கடைசி வரிகளை,

'It is nothing

but the great love

a deep affection

my sweetie'

*என்று மொழிபெயர்த்துள்ளார்.*

*'வேறில்லையடி' என்ற தமிழ்ச் சொல்லில் பொதிந்திருக்கும் உறவின் நெருக்கத்தை ஆங்கில மொழி மரபிற்கு ஏற்ப 'ஸ்வீட்டி' என்ற சொல்லின் வழியாக வெளிப்படுத்தி இருப்பது பாராட்டுக்குரியதாகும்.*

*இதே தொகுதியில் 'ராட்சசியா?' என்ற ஒரு கவிதை. இதில்,*

*'இவள் ராட்சசியா?*

*இல்லை*

*ரட்சகி என்கிறது*

*நள்ளிரவு விழிப்பு'*

*என்ற கவிதையைப் பின் வருமாறு மொழிபெயர்த்துள்ளார்.*

'Is she a demoness?

No, never

A saviour

declared

the midnight wake up'

*இக் கவிதையில் வரும் 'என்கிறது' என்ற சொல்லை இவர் declared என்று மொழிபெயர்த்திருப்பது மொழிபெயர்ப்புக்கு இன்னும் கம்பீரத்தைக் கூட்டுகிறது.*

*காதல் என்பது முரண்களின் தொகுப்பு*

*'நோய்க்கு மருந்து பிற அணியிழை தன்*

*நோய்க்குத் தானே மருந்து'*

*என்றான் வள்ளுவன். அத்தகைய முரண் ஒன்றை அழகாகப் பாடியுள்ளார்.*

*ராட்சசியா இல்லை என்று கவிஞர் ஒருமுறை சொன்னதை மொழிபெயர்ப்பாளர் No, never, என்று இரண்டு சொற்களால் அழுத்திச் சொல்லி இருக்கிறார். காதல் இனிமையானது என்பதைக் காட்டிட மொழிபெயர்ப்பாளர் பயன்படுத்தியிருக்கும் ஓர் உத்தி என்று இதனைக் குறிப்பிடலாம்.*

*இன்னொரு கவிதையில்,*

*'மாதவிக்கே கானல் வரி கண்ணகிக்கோ கண்ணீர் வரி*

*கோவலன் யாரும் பொற்கொல்லன் வீதியில்'*

*என்ற கவிதை வரிகளை மொழிபெயர்த்து சிலப்பதிகாரக் காட்சியை நம் கண் முன் கொண்டு வருகிறார். அடிக்குறிப்புகள் மூலமாக ஆங்கில வாசகர்களுக்குக் கண்ணகி, மாதவி, கோவலன் கதையை எடுத்துரைக்கிறார்.*

*உன்னோடு உறவாடுதல் என்ற கவிதைத் தொகுதியில், 'இவளை எப்படித்தான்?' என்ற கவிதையில்,*




*'தோழியும் இல்லை,*

*தேர்ப்பாகனும் அப்படியே.*

*தோழனும் இல்லை பாங்கனும்*

*ம்ஹூம்.*

*என் அழைப்புகளை*

*நிராகரிக்கும்*

*இவளை எப்படித்தான்?'*

*என்ற கவிதையை* How am I to..? *என்ற தலைப்பிட்டு இவர் சங்க இலக்கிய மரபையும் ஆங்கிலக் கவிதையில் கொண்டு வந்துள்ளார். சங்கப் பாடலில் தலைமக்களின் காதலை நிறைவேற்றி வைக்க தோழி, தேர்ப்பாகன், பாங்கன் என்பவர்கள் உண்டு. பாங்கனும் இல்லை என்ற குறிப்பைத் தரும் வகையில் கவிஞர் ம்ஹூம் என்ற ஒலிக்குறிப்பைத் தந்திருக்க இவர் தன்னுடைய மொழிபெயர்ப்பில்* Nothing *என்று சொல்லாக உணர்ச்சி வடிவம் தந்து மொழி பெயர்த்திருக்கிறார்*

How am I to …?

*என்ற சொற்களால் இக் கவிதையின் உச்சத்தை வெளிப்படுத்துகிறார்.*

*மொழிபெயர்ப்பாளரின் மொழிபெயர்ப்புத் திறனைப் பற்றி அமெரிக்காவைச் சேர்ந்த வாசகர் மருத்துவர் மெர்சி பவர் என்பவர் தெரிவித்திருக்கும் கருத்துக்கள் சிறப்புடையன.*

The language of love has been expertly translated by Dr. C. Rajeswari to retain the meaning and feel of the original Tamil poem. Every word has been painstakingly

analysed to bring not just the beauty of the written words but the ache behind them to the English Reader' என்று மெர்சி பவர் தனது கருத்துக்களைப் பதிவு செய்திருக்கிறார். "முனைவர் ராஜேஸ்வரி அவர்கள் ஒரு மொழிபெயர்ப்பு வல்லுநராக இருந்து இதை மொழிபெயர்த்திருக்கிறார். கவிதையின் கருத்தை மட்டும் அல்லாமல் அதில் இருக்கும் உணர்ச்சியையும் இவர் மொழிபெயர்ப்பில் முழுமையாக வடித்திருக்கிறார். ஒவ்வொரு சொல்லையும் மிகவும் கவனத்துடன் மொழிபெயர்த்து கவிதையின் அழகை மட்டும் அல்லாமல் அதற்குப் பின்னால் இருக்கும் கவிஞரின் வலியையும் ஆங்கிலத்தில் மொழி சுவைஞர்களுக்கு அவர்கள் மரபிற்கு ஏற்ப மொழி பெயர்த்து இருக்கிறார்." என்று ஆங்கில மொழி வாசகர் குறிப்பிட்டு இருப்பது மிகவும் பொருத்தமுடையதாகும்.

ஒவ்வொரு மொழிபெயர்ப்பிலும் மூன்று வித இயல்புகள் இருக்கும்.

ஒன்று மொழிபெயர்ப்பு மூலத்தை விடச் சிறப்பாக இருக்கும்.

இரண்டு, மொழிபெயர்ப்பு மூலத்திற்கு இணையாக இருக்கும்.

மூன்று மூலத்தின் இயல்பிலிருந்து குறைந்து இருக்கும்.

இது பொது விதி. முனைவர் செ. ராஜேஸ்வரியின் மொழிபெயர்ப்பில் முதல் இரண்டும் மிகுதியாகக் காணப்படுகின்றன. மூன்றாவதான தன்மையும் மிகச் சில மொழிபெயர்ப்புகளில் இருப்பதை நம்மால் காண முடிகிறது. "திறமான புலமை எனில் வெளிநாட்டார் அதை வணக்கம் செய்தல் வேண்டும்" என்று சொன்னான் பாரதி. அதீத வகையில் திறன் மிகுந்த கவிஞர் முத்தமிழ் விரும்பியின் கவிதைகளில் காணப்படும் கவிச்சுவையை, கவி அழகை, கவிநயத்தை, கவிதை இன்பத்தை மொழிபெயர்ப்பாளர் எளிய ஆங்கிலத்தில் நேரடியான மொழிநடையில் மொழி பெயர்த்திருக்கிறார்.

கவிதையை மொழிபெயர்க்கும் சிலர் சொற்களைத் தேர்வு செய்வதிலும் அவற்றைச் செம்மையான முறையில் சிறந்த வகையில் அடுக்கி வைப்பதிலும் முழுமை பெறாமல் இருப்பது உண்டு. ஆனால் முனைவர் ராஜேஸ்வரி அவர்களின் ஆங்கில நடை புதுக்கவிதை நடையாக உள்ளது. முத்தமிழ் விரும்பியின் கவிதையானது புதுக்கவிதை மரபிலும் தனிடையாக இருப்பதைப் போல மொழிபெயர்ப்பாளரின் ஆங்கில மொழி நடையும் எளிமை என்னும் அணிகலன் சூடி அழகுடன் மிளிர்கின்றது.

# இராவண காவியத்தின் காவியச் சுவை - பகுதி 1

- **கவிஞர் கனிமொழி,
வழக்கறிஞர், வெர்ஜினியா, அமெரிக்கா**



*புலவர் குழந்தையின் இராவண காவியம் இன்றும் பலரால் அறியப்படாதது. இராவண காவியத்தின் இலக்கிய நயம், கவிதை நயம், சொல் நயம் இவற்றை நாம் வரும் வாரங்களில் பகுதிகளாகப் பார்க்க உள்ளோம். இந்த நூல் 1946ஆம் ஆண்டு வெளிவந்தது. அன்றைய சென்னை மாகாண அரசால் 1948ஆம் ஆண்டு இந்த நூலுக்குத் தடை போடப்பட்டது. பின் கலைஞர் முதலமைச்சரான போது 1971ஆம் ஆண்டு தடை நீக்கப்பட்டது. இந்த நூலுக்கு ஆராய்ச்சி முன்னுரையை பேரறிஞர் அண்ணா வழங்கியுள்ளார். ஆராய்ச்சி அணிந்துரையை முத்தமிழ் அறிஞர் கலைஞர் எழுதியுள்ளார் என்பன குறிப்பிடத்தக்கவை.*

*இந்த நூலின் நோக்கத்தைப் பற்றி பேரறிஞர் அண்ணா குறிப்பிடும்போது;*

*"இராமதாசர்களுக்கு இராவண தாசர் விடுக்கும் மறுப்புரை அல்ல இந்நூல். இராமதாசர்களுக்கு, தன்மானத் தமிழர் தரும் மயக்க நீக்கு மருந்து இது. "தாசர் நிலை கூடாது தமிழா! இராமதாசர் என்பது ஆரிய தாசராக்குவதற்கே பயன்படும் நண்பா! என்று அறிவுறுத்தவே இந்நூல் வெளிவந்துள்ளது" எனப் பதிவு செய்துள்ளார்.*

*முத்தமிழ் அறிஞர் கலைஞர் அவர்களின் அணிந்துரையில்;*

*"இராவண காவியம் தெற்கேயிருந்து எழுகிறது. அய்ந்து காண்டங்கள், 57 படலங்கள், 3100 பாடல்களும் தமிழ் தமிழ் என்றே முழங்குகின்றன. இந்நூல் ஒரு கற்கண்டுக் கட்டி. இராவண காவியம் தெவிட்டாத தேனாற்று வெள்ளம்" என அழகுற எழுதியுள்ளார்.*

*இராவண காவியத்திற்குப் பேராசிரியர் ந. வெற்றியழகன் முழு உரை எழுதியுள்ளார். இத்தனை ஆண்டுகளில் வெளிவந்த முதல் முழு உரை அவருடையது தான் என அறிகிறோம். இராவண காவியத்தின் தலைவன் இராவணன்; அவன் மனைவி வண்டார்குழலி; அவன் தங்கை காமவல்லி; அவனின் தம்பி கும்பகன்னன்; மகன் சேயோன். இந்தப் பெயர்களைக் காவியத்தைப் படிக்கும்போது நினைவில் கொள்ளல் வேண்டும். அத்துனையும் அழகான தமிழ்ப் பெயர்கள் என்பதையும் மனதில் கொள்ள வேண்டும்.*

இராவண காவியத்தின் தொடக்கப் பாயிரத்தில் தமிழ் அன்னையைப் போற்றுகிறார் புலவர்;

மன்னை நேர்தரு வள்ளலும் மற்றரும்
பொன்னை யீந்தும்பொன் போன்றதம் இன்னுயிர்
தன்னை யீந்துந் தகவுட னோம்பிய
அன்னை நேர்தமி ழன்னையைப் போற்றுவாம்.



மன்னை, பொன்னை, தன்னை, அன்னை என அடுக்கியுள்ள கவிநயமே புலவரின் ஆற்றலுக்குச் சாட்சி. மன்னர்களைப் போன்ற வள்ளல்களும் மற்றவர்களும் பொன்னைத் தந்து அதுமட்டும் அல்லாது பொன் போன்ற இன்னுயிரை ஈந்து தகவுடன் பாதுகாத்த நம் அன்னையைப் போன்ற தமிழ் அன்னையைப் போற்றுவோம். எத்தனை இன்பமாக உள்ளது இந்த வரிகளைப் படிப்பதற்கு. ஓங்கிய குரலெழுப்பி இந்த வரிகளைப் படித்திடும்போது அதன் சுவையை மேலும் உணர முடியும். தமிழ் மொழிக்காக அரசர்களும் வள்ளல்களும் மட்டுமல்ல இந்தித் திணிப்பு நடந்தபோதெல்லாம் எதிர்த்துப் போராடி இன்னுயிர் ஈந்த மொழிப்போர் ஈகையோரும் இந்த வரிகளைப் படிக்கும்போது நினைவில் வருவர்.

தமிழின் சிறப்பைப் பற்றிக் கூறும்போது;

இனித்த பாலினுந் தேனினு மின்சுவைக்
கனித்தொ கையினுங் கட்டிக் கரும்பினும்

*நினைத்த வாயுஞ்சொல் நெஞ்சு மினித்திடும்*
*தனித்த மிழ்ப்பெருந் தாயினைப் போற்றுவாம்.*

பாலும் தேனும் பழங்களும் சுவைத்தால்தான் இனிக்கும் ஆனால் நம் தமிழ்மொழியை நினைத்தாலே நெஞ்சமெல்லாம் இனிக்கும்; சொன்னால் வாய் இனிக்கும். அத்தகைய சிறப்புடைய தமிழ் அன்னையைப் போற்றுவோம்.

தமிழ் பேசுவதற்கு இனிமையானது மட்டுமல்ல, எளிமையானதும் என்கிறார் புலவர் குழந்தை. சில மொழிகளை உச்சரிக்கப் பல விதமான சத்தங்களை எழுப்ப வேண்டும் அது இன்னல் தரக்கூடியது. ஆனால் தமிழ் எளிமையானது, அப்படிப்பட்ட தமிழ் அன்னையைப் போற்றுவோம் என்கிறார்.

*கனைத்து முக்கியுங் கர்ருக்கு ரென்றுயிர்*
*இனைத்துத் தேம்பி யிடர்ப்பட லின்றியே*
*இனித்த வின்சுவை யோடெளி திறப்படுந்*
*தனைத்த குந்தமிழ்த் தாயினைப் போற்றுவாம்.*



இந்த வரிகளில் உள்ள பொருளும் நயமும் நம்மை பற்றிக் கொள்ளும். கனைத்தும் கர் குர் என்னும் ஒலியெழுப்பா மொழி தமிழ் மொழி என்பது எத்தனை உண்மை.

தமிழ் அரசர்கள் நான்கு திணைகளில் உள்ள மக்களைச் செம்மையுடன் ஆண்டனர். அவர்களையும் போற்றுவோம் என்கிறார் புலவர்.

*மலையுங் காடும் வயலுங் கடலுமா*
*முலக நான்கு முறுவளந் தேங்கிய*

நிலைய மாக நிகழ்த்திய நானிலத்
தலைவர் பொற்கழல் தம்மை வழுத்துவாம்.

நேரடியாக திணைப் பெயர்களைக் கூறாது அவை சார்ந்த இடங்களின் பெயர் அழைப்புகளைக் கவிதையில் சுட்டி எழுதியுள்ள நயத்தை இந்தப் பாடலில் காணலாம். மலையும் குறிஞ்சியும், காடும் முல்லையும், வயலும் மருதமும், கடலும் நெய்தலும் என உணர்ந்து படிக்கவும்.

இராமனைத் தங்கள் கடவுளாக எண்ணிய தமிழர்கள் இரவைப் பகலென நினைத்துக் கொண்டவர்கள், அதனால் தான் நிலவு எவ்வாறு ஒளி மங்கி மறைந்து போகுமோ அது போன்ற நிலையைத் தமிழர்கள் அடைய நேரிட்டது என்கிறார்.

தங்கு லப்பகை தன்னைக் கடவுளா
எங்கு லத்தவ ரெண்ணி வணங்கியே
கங்கு லைப்பகற் கால மெனக்கொளும்
திங்கள் போலத் திறம்பிட லாயினர்.

இந்தப் பாடலில் தங்கு எங்கு கங்கு திங்கள் என ஒரே எதுகையைப் பயன்படுத்தி இருப்பது படிப்பதற்கு ஏதுவாகவும் அழகுடன் இருப்பது போன்றே இந்தப் பாடலின் பொருளும் கூர்மையானது. இனப் பகைவனைக் கடவுள் என ஏற்றுக் கொண்டதன் விளைவு தான் தமிழர்கள் ஒளி நிறைந்த வாழ்விலிருந்து அடிமை வாழ்விற்கு வந்த காரணம் என்பது எத்துணை உண்மை என்பதை எண்ணிப் பார்த்திடும்போது புலப்படும்.



இராவண காவியத்தின் தேவையைப் புலவர் குழந்தை இந்தப் பாடலில் கூறுகிறார். மேற்கே மறைந்த சூரியன் கிழக்கில் உதிக்கும்போது அடர்த்தியான இருள் நீக்கி செங்கதிர் ஒளி தருவதைப் போல புதிய வெளிச்சத்தைத் தமிழர்களுக்குக் காட்ட எழுந்ததே இந்த நூல் என்கிறார்.

விழுந்த ஞாயிறு மேக்கெழு காலையில்
ஒழிந்து வல்லிரு ளோவுறச் செங்கதிர்
பொழிந்து மக்கட்குப் புத்தொளி காட்டல்போல்
எழுந்த தேகொலாம் இப்பெருங் காவியம்.



ஞாயிறு மறைவது போலத் தோன்றலாம் ஆனால் மீண்டும் உதிக்கும். அதுபோலவே தமிழினம் மீண்டும் தலைதூக்கும் என்ற பொருளும் இந்தப் பாடலில் உணரலாம்.

வடவரையு மிடைவரையும் வானளவுங் குடவரையும்
மிடைவரையா தெழுகோதா விரிகாரி பெண்பாலி
தடவரைகா விரிவானி தமிழ்வையை பொருநைமுதல்
நடைவரையா வாறுகளால் நல்வளத்த திருநாடு.

வடமலையும் இடைநின்ற மலையும் மேற்கு மலையும் ஒருபுறம் எழிலாய் வளர்ந்தோங்கி நிற்க, மண்ணை வளப்படுத்த கோதாவிரியும் கிருட்டிணாவும் பெண்ணையும் பாலாறும் காவிரியும் பவானியும் வையையும் பொருநையும் வற்றாமல் ஓடிக்கொண்டிருக்கும். இத்தகைய வளம் பொருந்திய நிலம் தமிழ் நிலம். தமிழ் நிலத்தின் ஆறுகளையும் மலைகளையும் அவற்றால் மண் அடையும் பயனையும் அழகுறக் கூறும் பாடல் இது.

குறிஞ்சியின் அழகைப் பற்றிக் கூறுவதைத் தமிழகக் காண்டத்தில் இந்தப் பாடலின் மூலம் அறியலாம். குறிஞ்சியின் சூழல் மலையும் மலை சார்ந்த இடமும் மட்டுமல்ல, திருமணத்திற்கு முன் காதலர்கள் சந்தித்து காதல்

உறவாடும் சூழலையும் கொண்டது. அந்த நயத்தை தன் பாடலில் இயல்பாகக் கையாண்டிருப்பார் புலவர்.

துளிமிகு கூதிரிற் றுணைமை யோடுயிர்
களிமிகி யாமமெய் கலந்தங் கின்புற
அளிமிகு காதல ரணுகி யன்பது
கொளவிட மாய்மழைக் குறிஞ்சி மன்னுமால்.

எதுகை நயத்துடன் குறிஞ்சியின் எழிலைக் காணலாம். மலையில் மழை அதிக அளவில் பொழிந்து கொண்டே இருக்கின்ற காரணத்தால் குளிர் ஏற்படுகிறது. அந்தக் குளிரை விரட்டக் காதல் கொண்ட உள்ளங்கள் இணைந்து மெய் கலந்து உறவாடுகின்றன எனப் பாடல் விளக்குகின்றது.



இராவண காவியம் முழுவதும் சங்க இலக்கியக் கூறுகளைக் காண முடியும். அந்த வகையில் உடன்போக்கு பாடல்கள் நிறைந்தது பாலை நிலப் பாடல்கள். உடன்போக்கு என்றால் தலைவனும் தலைவியும் விரும்பி வெளியேறித் திருமணம் செய்து கொள்வது. அதைப் பற்றி புலவர் கூறும்போது,

பொருந்திய நண்பகற் போதிற் காளைபின்
திருந்திழைக் கன்னியுஞ் செல்லக் கண்டுமே
இருந்துமே யெம்மனை யின்று நாளைநீர்
விருந்துண்டு சென்மென வேண்டிக் கொள்வரே.

நண்பகல் வேளையில் காளை ஒருவனுடன் நகைகள் அணிந்த பெண்ணொருத்தி செல்வதைக் கண்ட பாலை நில மக்கள் அவர்களைத் தங்கள் வீட்டில் தங்கி விருந்துண்டு போகுமாறு கூறுவார்களாம்.
மேலும் காவியச் சுவை தொடரும்...

# திருக்குறள் வழங்கும் தனிமனித வாழ்வில் தீநெறிகளை நீக்க உதவும் ஆமை – (ஆ)

**கி. செயராமன்**

*jayaram5553@gmail.com*

திருக்குறளில் ஆமை என்ற உடனே அடக்கமுடைமையில் உள்ள குறள்தான் அனைவருக்கும் நினைவில் வரும்.

ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்கல் ஆற்றின்
எழுமையும் ஏமாப்பு உடைத்து (குறள். 126)

என்று கூறுவார். ஆமை தன் தலை நான்கு கால்கள் என ஐந்து உறுப்புகளையும் தன் ஓட்டினுள் அடக்கி வைத்து தனக்குரிய பாதுகாப்பை ஏற்படுத்திக் கொள்ளும். அதுபோல இப்பிறவியில் ஐம்பொறிகளையும் அடக்கி ஆளும் வல்லமையைப் பெற்றிருப்பின் இனி எழுகின்ற எல்லா பிறப்பிலும் தன்னைச் சிறப்புறப் பாதுகாத்து வாழும் ஆற்றல் தானே ஏற்பட்டுவிடும் என்பதை எடுத்துரைக்கிறார்.

**ஆமை - விளக்கம்:**

இங்கு உயிர்வாழும் விலங்கின ஆமையைப் பற்றி கூறப்போவதில்லை. அதிகாரத் தலைப்பின் இறுதியாக வரும் ‘ஆ’ என்னும் எதிர்மறை இடைநிலையும் ‘மை’ என்னும் பண்புப்பெயர் விகுதியும் இணைந்து ஆமை என்று முடியும் அதிகாரங்களை நோக்குவோம். ஊர்ப்புறத்தில் ‘ஆமை புகுந்த வீடும் அமீனா நுழைந்த வீடும் விளங்கவே விளங்காது’ என்று ஒருபழமொழி உண்டு. ஆமை வீட்டிற்குள் நுழைந்துவிட்டால் அந்த வீட்டை ஆங்காங்கே ஓட்டை போட்டுவிடும் அதனால் வீடு அழிவிற்குள்ளாகும். இதற்கு இன்னொரு அறிவுசார் பொருளும் உண்டு. ஆமை என்பது கல்லாமை, இயலாமை, முயலாமையைக் குறிப்பதாகவும் கொள்ளப்படும். நாம் திருவள்ளுவர் குறிப்பிடும் ஆமைகளைக் காண்போம்.

**திருக்குறளில் உள்ள ஆமைகள்:**

**அறத்துப்பால் - இல்லறவியல்**

*1) அதிகாரம் 15 – பிறனில்விழையாமை*

*2) அதிகாரம் 17 – அழுக்காறாமை*

*3) அதிகாரம் 18 – வெஃகாமை*

*4) அதிகாரம் 19 – புறங்கூறாமை*

*5) அதிகாரம் 20 – பயனில சொல்லாமை*

***அறத்துப்பால் - துறவறவியல்***

*6) அதிகாரம் 29 – கள்ளாமை*

*7) அதிகாரம் 31 – வெகுளாமை*

*8) அதிகாரம் 32 – இன்னா செய்யாமை*

*9) அதிகாரம் 33 – கொல்லாமை*

*10) அதிகாரம் 34 – நிலையாமை*

**பொருட்பால் - அரசியல்**

*11) அதிகாரம் 41 – கல்லாமை*

*12) அதிகாரம் 46 – சிற்றினம் சேராமை*

*13) அதிகாரம் 54 – பொச்சாவாமை*

*14) அதிகாரம் 57 – வெருவந்த செய்யாமை*

*15) அதிகாரம் 63 – இடுக்கண் அழியாமை*

**பொருட்பால் - அங்கவியல்**

*16) அதிகாரம் 73 – அவை அஞ்சாமை*

*17) அதிகாரம் 90 – பெரியாரைப்பிழையாமை*

*18) அதிகாரம் 93 – கள்ளுண்ணாமை*

***காமத்துப்பால் - கற்பியல்***

*19) அதிகாரம் 116- பிரிவு ஆற்றாமை*

*அறத்துப்பால் (இல்லறவியலில் – 5) (துறவறவியலில் – 5) பத்து அதிகாரங்கள், பொருட்பால் (அரசியலில் – 5) (அங்கவியலில் – 3) எட்டு அதிகாரங்கள் காமத்துப்பால் (கற்பியல் – 1) ஓர் அதிகாரம் என (10+8+1=19) பத்தொன்பது அதிகாரங்கள் ஆமையில் முடிகின்றன. அவ்வதிகாரங்கள் யாவும் நாம் வாழ்வில் எங்கு எவ்வாறு எப்படி இருத்தல் சிறப்பின்மையை, சிறப்பைத் தரும் என்பதை*

வெளிப்படுத்துவனவாக அமைந்துள்ளன. இனி ஆமை நுழையாத, நுழையும் வாழ்வை வரவேற்போம்.

**திருக்குறளின் முதல் ஆமை அதிகாரம் இல்லறவியலில் பிறனில் விழையாமை:**

பிறன்+இல்+விழை+ஆ+மை = பிறனில்விழை+ஆமை என்போம். இந்த ஆமை மனதில் குடிபுகுந்து வாழ்ந்தால் நல்வாழ்வு வாழமுடியும். தமிழர் தம் வாழ்வியலில் இல்லறமல்லது நல்லறமன்று என்று வாழும் கோட்பாட்டினராக விளங்குவர். இல்லறத்தில் நல்லறம் அல்லாததும் உண்டு என்பதை அறியவைக்கிறார். தன் மனைவியோடு வாழ்ந்து மகிழ்வது இல்லறமாகும். ஆனால் பிறருடைய மனைவிபால் இச்சை கொள்ளுதல் அறமன்று என்பதை உணர்த்தவே பிறனில் விழையாமை எனும் எதிர்மறை ஆமையாகும்.

மக்கள் தம் வாழ்வில் அடையவேண்டிய இலக்குகள் நான்காகும். அவை அறம், பொருள், இன்பம், வீடு என்பனவாகும். நூல்களைக் கற்பதால் ஏற்படும் பயனும் இவையேயாகும். இல்லறத்தில் வாழ்வோர் அறத்தை முறையாகப் பின்பற்றுவர். பொருள் தேடுவதில் வல்லவராயிருந்து பொருளியற்றி மகிழ்வர். இவ்விரண்டின் ஆற்றல் மீது தன்னை ஈடுபடுத்திக்கொண்டு வாழ்வோரால் மட்டுமே பிறன் மனைவியை விரும்பும் அறிவற்ற செயல் தோன்றாது வாழ்வர்.

நன்னெறி அல்லாத பாவச் செயல்களைச் செய்வோர் பலர் இருப்பர். அவருள் பிறன்மனைவியை விரும்பி அவள் வீட்டு வாசலில் நிற்கும் இழிந்த மூடர்களாய் வாழ்வதைத் தவிர்த்து நல்லோராய் வாழ முயலுதல் சிறப்பாகும்.

ஐயமில்லாமல் நம்பியவரின் மனைவியிடம் தவறாக நடந்து கொள்பவர் உயிரோடிருந்தாலும் அவர்கள் இறந்த பிணத்திற்கு ஒப்பானவராகவே உலகோர் கருதுவர்.



ஊரில் எவ்வளவு உயர்ந்த நிலையில் பெருமையுற்று வாழ்ந்து கொண்டிருந்தாலும் அவர் பிறன் மனைவியை விரும்பிச் செல்பவர் ஆயின் தினையளவு குற்றம் எனினும் அது மலையளவாகக் கொள்ளப்பட்டு தன் பெருமையை இழந்து இழிந்தவராவார்.

பிறன் மனைவியை அடைதல் எளிது என்று அவளிடம் செல்வோன் உலகில்



யாராலும் தீர்க்க முடியாத பெரும் பழியை அடைந்து பின்னாளில் துன்புறுவான்.

பிறன் மனைவியைச் சேர்வானிடம் பகை, பாவம், அச்சம், பழி என்னும் நான்கு குற்றங்களும் அவனைவிட்டு நீங்காது நிலைத்து நிற்கும்.

பிறன் மனைவியை விரும்பாமை என்பது மிகப்பெரிய உயர்ந்த ஆண்மைத் தன்மையாகும். இது மிகப்பெரிய சிறந்த அறநெறி மட்டுமல்லாது சான்றோரின் ஒழுக்க நெறியாகவும் விளங்கும். எனவே ஆண்மையாளனாய் வாழ்க.

அச்சம் தருகின்ற கடல் நீரால் சூழப்பட்டுள்ள உலகில் நன்மைக்கு உரியவர் யாரெனின் பிறருக்கு உரிய மனைவியின் தோள்களைத் தழுவாதவரே ஆவர். அறநெறியைப் பின்பற்றாது பாவங்களைச் செய்து வாழும் இயல்புடையவன் ஆயினும் பிறருக்கு உரியவளின் பெண் தன்மையை விரும்பாமை நன்மை தருவதாகும்.

தமிழரின் உயரிய நிலையான, ஒருவனுக்கு ஒருத்தி என்பதிலிருந்து பல பண்பாட்டினரில் கலவையால் மாற்றம் ஏற்பட்டுச் சூழலியலில் தோன்றிய மாற்றத்தை யாரும் பின்பற்றாது வாழவே இவ்வதிகாரம் தோன்றியது எனலாம். இதனால் இல்வாழ்வான் நிலை பிறன்மனை விழைவை விரும்பினால் இழிந்த நிலையை அடைவான் என்பதை உணர்த்துகிறார். பிறனில் விழையாமை என்னும் ஆமையை மனதில் வாழவைத்து வையம்போற்ற நல்வாழ்வு வாழ்வோம்.

**அழுக்காறாமை என்னும் ஆமை:**

அழுக்கு+ஆறு+ஆ+மை = அழுக்காறாமை ஆகும். அழுக்காறு+ஆமை எனக் கொள்வோம். இந்த ஆமையை மனதில் வாழவிட்டு துன்பமின்றி வாழ்வோம். இல்வாழ்வில் முறைதவறுதல் அழுக்கு ஆகும். ஆறு என்பது வழியாகும். அடுத்து ஆமை என்பது வாழ்வில் தீமையே விளையும். அழுக்கு வழி துன்பம் தரும் எனலாம். அழுக்காறாமை என்பது தம்மைப் போன்றாரை ஒப்பிட்டுப்பார்த்து மனதில் தோன்றும் அழுக்கினைப் பொறுத்துக் கொள்ளாமை எனும் பொறாமை ஆகும். அழுக்காறாமை என்பது பொறாமை கொள்ளாதிரு மனமே; சிறப்புற்று வாழ்வாய்; இல்லை எனில் துன்புற்று

அழிவாய் என்பதை எடுத்துரைக்கிறது. ஆமைகளால் இல் வாழ்வு சிறக்கும் என்பதை அறிவோம்.

ஒழுக்கமாய் வாழ்வதுதான் இல்வாழ்விற்கான வழியாகும். அதில் எந்தச் சூழலிலும் பிறரின் வளர்ச்சியைப் பார்த்துப் பொறாமை கொள்ளாது உழைப்பினால் பெற்ற உயர்வு என்று வாழ்த்தி மனதில் அழுக்காறு இல்லாமல் ஒழுக்கமாய் வாழ்தல் சிறப்புடைய இல்வாழ்வின் வழியாகும்.

யாரிடமும் பொறாமை கொள்ளாது வாழும் வாழ்க்கையானது இல்வாழ்வில் பெற்றொளிர வேண்டிய எல்லாச் செல்வங்களையும் பெற்றதற்கு ஒப்பானதாகும். அழுக்காறு இல்லாது வாழ்தல் என்பது நாம் பெறுகின்ற விழுமிய பேறாக விளங்கும்.

அறம் செய்தல் நமக்கு ஒத்துவராது; செல்வம் எப்போதும் நம்மிடம் வந்து சேராது என்னும் வெறுப்பான முடிவினை மேற்கொள்பவன் பிறரது செல்வத்தைக் கண்டு அழுக்காறான பொறாமையைக் கைக்கொள்வான்.

தீய செயல்களைச் செய்வதால் நம்மை நாடித் தீங்குகளே வருகின்றன என்பதை அறிந்த அறிவுடையோர் பிறர் மீது பொறாமை கொள்ளாமையால் தீமைகள் செய்யும் நிலைக்குத் தள்ளப்படமாட்டார்கள். பொறாமை கொள்ளின் தீங்குகளே வந்து சேரும்.

நமக்கு வேண்டாதவர் இருவர் உள்ளனர். ஒருவர் பகைவர் மற்றொருவர் பொறாமை ஆவர். இவ்விருவரில் பகைவர் நமக்குக் கேடு செய்வதைத் தவிர்த்தாலும் தவிர்த்துவிடுவர். ஆனால் பொறாமை வந்து சேர்பவரை தீமையில் தள்ளி அழித்துவிடும். அழுக்காறாமையை மனதுள் பதித்து வாழ்வோம்.

**பொறு+ஆமையால் விளையும் தீமைகளை உணர்ந்து அதனைத் தவிர்ப்போம்:**

ஈதல் தமிழரின் தனிப் பண்பாகும். அதுவும் கொடுத்தல் என்பது உற்றுழி உதவுதலாகும். இவ்வாறு கொடுப்பதைப் பொறாமையால் தடுப்பவனும் அவனுடைய சுற்றமும் உண்ண உணவும் உடுக்க உடையும் இன்றித் தவிக்கும் நிலை ஏற்பட்டுவிடும்.

நம்முடைய வாழ்விற்கு வளந்தருபவர் ஒருவர் உண்டு. அவர் பெயர் திருமகள். இன்னொருவர் வாழ்வை இருளாக்குபவர். அவர் பெயர் தவ்வை எனும் மூத்த தேவியான மூதேவி. பிறர் உயர்வினைக் கண்டு பொறாமைப்படுபவரைப் பொறுத்துக் கொள்ளாமல் தான் அங்கிருந்து விலகி தன் தமக்கையான மூதேவியைத் தங்க வைத்து விடுவாள். அதனால் இல்லறத்தில்

பொருளில்லாமல் இருள் சூழ்ந்துவிடும். திருமகள் நம் இல்லத்தில் தங்கி வாழ பொறாமையை விரட்டியடிப்போம்.

பொறாமை என்பவன் யாரிடம் சேர்கிறானோ அவர்கள் நல்லவர்களாய் இருப்பினும் அவர்களைப் பாவி ஆக்கிவிடுவான். அதுமட்டுமல்லாமல் இப்பிறவியில் செல்வத்தை அழித்துவிடுவான். மேலும் அடுத்த பிறவியில் தீங்குகளின் இருப்பிடமான நரகத்திற்குள் செலுத்தி விடுவான்.

தற்காலத்தில் பொறாமையாளன் செல்வம் நிறைந்து செழிப்புள்ளவனாக இருக்கிறான். பொறாமை இல்லாத நல்லவன் வறுமையுற்றவனாகத் திகழ்கிறான். இந்நிலை அவர்களின் தனிப்பட்ட ஒழுகலாறுகளை ஆய்ந்து அறிந்துதான் அதற்குரிய காரணத்தைக் கண்டறிதல் வேண்டும். அதற்காகப் பொறாமையைக் கைக்கொள்ளுதல் கூடாது என்பதைத் தெளிவுபடுத்துகிறார்.

பொறாமை கொண்டு அதன்வழி வளர்ச்சி அடைந்தவர் யாருமில்லை. அப்பொறாமையைக் கைக்கொள்ளாதவர் எச்சூழலிலும் செல்வத்தில் குறைந்தவர் ஆனதும் இல்லை என்பதறிவோம்.

அழுக்காறு என்னும் பொறாமை தீமையை மட்டுமே விளைவிக்கும். அதனால் அதனைக் கைவிட்டு வாழ்வதை நெறிமுறையாகக் கொண்டு இல்லறத்தில் வாழ்வது இன்பத்தையும் செல்வத்தையும் தளரா உறுதியையும் வாழ்வில் வழங்கும் என்பதை அறிந்து வாழ்வோம்.

**வெஃகாமை என்னும் ஆமையை அறிவோம்:**

வெஃகு+ஆ+மை என அதனைப் பிரிக்கலாம். வெஃகு+ஆமை எனக்கொள்வோம். வெஃகு என்றால் என்ன? வெஃகு என்பது பிறர்க்கு உரிமையான பொருளைத் தனக்காகக் கவர்ந்து கொள்வதாகும். இதில் விருப்பம் எனும் ஆசையோடு யாருமறியாமல் அதனைக் கவர்ந்து கொண்டு தனக்குரிமையான ஒன்றாக ஆக்கிக் கொள்ள முயலுதல் எனலாம். இவ்வாறு இல்வாழ்வில் மேற்கொள்வது ஆமைதான் என்பதை





உணர்ந்திருப்போம். இந்த ஆமையை உள்ளத்திலிருந்து விரட்டி வாழ்தல் சிறப்பாகும் என்பதை அறிவோம்.

சமுதாய வாழ்க்கை நடுவுநிலைமையுடன் வாழும் வாழ்க்கையாகும். இதில் பலருக்குரிய செயல்பாடுகளைப் பகிர்ந்து ஆற்றுதல் சிறப்பான பண்பாகும். இதில் தனியாள்களுக்குள் வேறுபாடுகள் எழுவதையும் காணலாம். ஒருவன் நடுவு நிலைமையைப் பற்றி அச்சம் கொள்ளாமல் பிறர் பொருளைக் கவர்ந்திட விரும்புவா னாயின், எண்ணுவானாயின் அவனுடைய குடிப்பெருமை கெட்டழியும். சமுதாயத்தின் முன் குற்றவாளியாய் நிற்கவேண்டி வரும். எனவே பிறர் பொருளைக் கவர்கிற எண்ணத்தைத் தவிர்த்து வாழ்வோம்.

நடுவுநிலைமை தவிர்வதால் உண்டாகும் இழிவுக்கு நாணுபவர் பிறர் பொருளால் வரும் பயனை விரும்பிப் பழி உண்டாகும் செயல்களை ஒருபோதும் செய்யாதிருப்பர். இல்லற வாழ்விலும் சமுதாய வாழ்விலும் நிலையான இன்பத்தைப் பேணிப் பாதுகாப்பவர் பிறர் பொருளைக் கவருவதால் உண்டாகும் சிற்றின்பத்தையும் பிறரால் பழிக்கப்படும் செயல்களையும் செய்யாது நன்னெறியில் பயணிப்பர்.

ஐம்புலன்களையும் வென்றவர், வாழ்வில் அவர் காணும் காட்சிகள் யாவும் குற்றமற்ற காட்சிகளாகவே இருக்கும். புலனை அடக்கி ஆளும் ஆற்றல் மிகுந்தவர் தம்மிடம் பொருள் இல்லையே என்று பிறர் பொருளை ஒருநாளும் கவர்ந்திட விரும்புவதில்லை. உலக வாழ்வில் ஒவ்வொருவரும் புலனடக்கம் உடையவராயின் பிறர்பொருளை விரும்பாமை என்பது இயல்பானதாக விளங்கும்.

அனைவரிடமும் தான் விரும்புவனவற்றை ஒரு காரணம் கூறி அவர்கள் அறியாமலேயே கவர்ந்து அடைந்து வாழும் வாழ்க்கை அறிவற்றவரின் வாழ்க்கை யாகும். உலகில் பரந்துபட்ட நுண்ணறிவு என்று ஒன்று இருக்கிறது. அதனால் உலகில் விளைந்த மாற்றம் என்ன என்ற வினா எழுவதும் இதனால் தோன்றுகிறது. மக்கள் நுண்ணிய அறிவுடையோராய் விளங்குதலே மாற்றத்திற்கான வழியாகவும் ஏமாற்றத்திற்கான தடையாகவும் விளங்கும் என்பதறிந்து வாழ்வோம்.

**பிறர்பொருளை வெஃகுவதால் உண்டாகும் தீமைகளறிந்து வெஃகாமையை ஏற்போம்:**

உலகில் வாழ்கின்ற ஒவ்வொருவரும் அருள் உடையோராக வாழவே விரும்புவர். அருள் என்பது தேவையானதைத் தேவையான நேரத்தில் தேவை உடையோர்க்குத் தேடாமல் தவிக்கும்போது அளித்து உதவுவதாகும். இத்தகு அருளாளன் பிறர் பொருளை வெஃகுவான் ஆயின் அவன் கெட்டு அழிந்துவிடுவான் என்பதை உணர்ந்து வாழ்வோம்.

பிறருடைய பொருளை மனதினுள் பெரிதும் விரும்பி அவர் அறியாதவாறு கவர்ந்து கொண்டு அதனால் பெருஞ்செல்வத்தை உடையவர் ஆனாலும் அச்செல்வத்தால் யாருக்கும் ஒரு நன்மையும் விளையாது தீங்காகவே முடியும் என்பதை அறிந்து வாழ்தல் வேண்டும்.

இயல்பாகவே பெருஞ் செல்வந்தனாய் வாழ்கின்ற ஒருவன் அச்செல்வத்தை முறையாக தனக்காகவும் பிறர்க்கு உதவுவதற்காகவும் பயன்படுத்தி வாழ்தல் வேண்டும். இச்சூழலில் பெருஞ் செல்வம் படிப்படியாய் வளரும்; உலகில் புகழும் மலரும். அதைவிடுத்துப் பிறர் கைப்பொருளை வெஃகாது இருத்தல் செல்வம் குறையாது இருப்பதற்குச் சிறந்த வழி என்பதை உணர்ந்து வாழ்வோம்.

இல்லற வாழ்வில் சமுதாய வாழ்வில் அறநெறியை முறையாகப் பின்பற்றி வாழ்கின்றவர் அறநெறியாளர். பிறர் பொருளைக் கவர்ந்து வாழ்வதை விரும்பாத வெஃகாமையாளர். வாழ்வியலின் வாழ்வறிந்து வாழ்கின்ற அறிவுடையாளர். இவர்களுக்குச் செல்வம் தானே வந்து சேர்ந்து மற்றவர்களுக்கு உதவும் இயல்பை வளர்த்துவிடும் என்பதை அறிந்து வாழ்வோம்.

பிறர் பொருளைக் கவர்ந்து வாழ்வது கேட்டினைத் தரும் என்பதை உணராமல் பிறர்பொருளைக் கவர்ந்து வாழ்ந்திட எண்ணினால் அது மிகப்பெரிய அழிவினைத் தரும். பிறர் பொருளை வெஃகாது வாழ்தல் என்பது வாழ்வியலின் செருக்காக அமைந்து வாழ்வில் வெற்றியாளனாக வாழ்ந்திடப் பெரிதும் துணைநிற்கும் என்பதறிந்து வாழ்வோம்.




வெஃகாது பிறர் பொருளைக் கவராது வாழும் இல்லற வாழ்க்கை செல்வந்தர்

வாழ்க்கையாகவும் அறிவுடையோர் வாழ்க்கையாகவும் துன்பமற்ற வாழ்க்கையாகவும் அமையும் என்பதை அறிந்திட வெஃகாமை துணை நிற்கிறது. இந்த ஆமையை மனதிலிருந்து விரட்டி வாழ்வோம்.

**பழித்துப் புறம் பேசுவதால் விளையும் இழிநிலைகளை அறிவோம்:**

பிறரைப் பழித்துப் புறம்பேசும் இயல்புடையவனைக் கண்டறிந்தோர் அவனுடைய குற்றங்களையும் பிறரிடம் எடுத்துரைப்பர். இதனால் சமுதாய மக்களால் இழித்துப் பேசும் இழிநிலையை அடைவான் என்பதறிந்து வாழ்வோம்.

குறை இல்லாதார் சமுதாயத்தில் யாரும் இல்லை என்பது அனைவரும் அறிந்ததாகும். இதனை மனதில் எண்ணி அனைவரும் ஒருவருடன் ஒருவர் அன்பாய்க் கலந்து பேசி நட்பாய் வாழ்தல் பெருமையான செயலாகும். இதன் பெருமையை உணராதவர் மட்டுமே புறம்பேசி அனைவரையும் பிரித்துவிடுவர். புறங்கூறல் அனைவரையும் மகிழ்வாக வைத்துக் கொண்டிருக்காது பிரித்துவிடும் என்பதறிந்து வாழ்வோம்.

நெருங்கிப் பழகும் நண்பர்களிடையே அவர்களைப் பற்றி குற்றம் கூறித் திரிகின்றவர்களாகப் புறங்கூறுபவர்கள் விளங்குகின்றனர். நண்பர்களையே இவ்வாறு துன்பத்துக்குள்ளாக்கும் பிரிவினையை உருவாக்கும் இவர்கள் அறிமுகமே இல்லாதவர்களிடம் பேசினால் என்னென்ன தவறான விளைவுகள் உண்டாகுமோ எனில் ஏராளமாய் உண்டாகும். எனவே இத்தகையோர் நிலை உணர்ந்து வாழ்வோம்.

சமுதாயத்தையும் மக்களையும் தாங்கிப்பிடிப்பது புவி எனப்படும் மக்கள் வாழ்கின்ற உலகமாகும். மக்களிடையே புறம்பேசித் துன்பத்தையும் பிரிவையும் கருத்து வேறுபாட்டையும் உருவாக்கும் புறங்கூறுபவர்களும் உலகில் வாழ்கின்றனர். புவியாகிய உலகின் இயல்பு அனைவரையும் தாங்கி நிற்பதாகும். புவியின் அறமான தாங்குதலின் அடிப்படையில் புறம்பேசுவோரையும் தாங்கி நிற்கிறது. அதுமட்டும் இல்லையேல் அவர்களைத் தாங்காது தள்ளிவிடும் என்பதாக புறங்கூறுதலின் மிகைப்பட்ட இயல்பை எடுத்துரைப்பதால் நம் நெறியை உணர்ந்து வாழ்வோம்.

ஒவ்வொரு மனிதரும் பிறரின் குற்றத்தைக் காண்பதுபோல் தன் குற்றத்தையும் கண்டறிந்து அதனைப் போக்கிக்கொள்ளக் கூடிய பண்பாகும் இயல்பு தோன்றிவிடின் புறங்கூறுதல் என்னும் இழிநிலை உலகில் இல்லாமல் அழிந்துவிடும் என்பதைத் தெளிந்து வாழ்வோம்.

புறங்கூறல்தான் சமுதாயத்தின் இழிநிலைக்குக் காரணம். எனவே மக்கள் அன்பையும் இரக்கத்தையும் அறநெறியையும் பின்பற்றும் சூழல் நிலவ வேண்டுமாயின் பிறர் மீதான குற்றத்தைக் காண்பதுபோல் தன்னிடமுள்ள குற்றத்தையும் கண்டறிந்து போக்கிக் கொண்டால் புறங்கூறல் இல்லாமல் போகும். இந்த ஆமையை விரட்டி நாம் அனைவரும் நல்வாழ்வு வாழ்வோம்.

**பயனில சொல்வதால் விளையும் தீமைகளை அறிந்து பயனுடைய சொல்வோம்:**

பயனில+சொல்+ஆமைஎன்று கொள்வோம். பயனற்றவற்றைச் சொல்வது விரட்டப்பட வேண்டிய ஆமை என்பதறிவோம். நாம் பேசுகின்ற சொற்கள் பலருக்கும் பயன்தரக் கூடியதாக இருக்கவேண்டும். அதைவிடுத்துப் பயனில்லாத சொற்களைப் பேசுவதால் சமுதாயத்தில் இல்லறத்தில் நன்மைகள் விளையாது என்பதை உணர்த்தவே இந்த ஆமையை அவிழ்த்து விரட்டிவிட வழிசெய்கிறார்.



கனிவான சொற்களை அன்பாக வெளிப்படுத்தும்போது அந்த இடம் அன்பாலும் மகிழ்ச்சியாலும் நிறைந்திருக்கும். அதைவிடுத்து அங்கு கடிந்து சொல்லும் சொற்களை வீசினால் மகிழ்ச்சியோ அன்போ இல்லாமல் வெறிச்சோடிவிடும். ஒருவர் அன்பான சொற்களைப் பேசும்போது அவர் அனைவராலும் வரவேற்கப்படுவார். பயனற்ற சொற்களைப் பேசும்போது அவர் அனைவராலும் வெறுத்து ஒதுக்கப்படுவார். இவற்றை உணர்ந்து பயனற்ற கடுஞ்சொற்களைப் பேசுவதைத் தவிர்ப்போம். கண்டிப்பதற்கும் அன்பான சொற்கள் உள்ளன அவற்றைப் பின்பற்றி வாழ்வோம்.

பயன்தராத கடுஞ்சொற்களை பலர் கூடியுள்ள இடத்தில் பயன்படுத்துவது தீமையை விளைவிக்கும் என்பதை உணர்தல் வேண்டும். இச்செயலானது

நண்பர்களிடத்துச் செய்யும் நன்மை பயவாச் செயல்களால் விளையும் தீமையினை விடக் கொடியதாக விளங்கும். எங்கும் பயனற்ற சொற்களைப் பயன்படுத்தாது நற்சொற்களை நாளும் பயன்படுத்தி வாழ்வோம்.

பயனில்லாத சொற்களைத் தான் பயன்படுத்தியதற்கான காரணத்தைப் பலவாறாக விரித்து உரைப்பவனின் உரையானது அவன் அறநெறி வழி வாழாதவன் நீதியற்றவன் என்பதைத் தானே வெளிப்படுத்திவிடும். இவ்வாறு தீநெறியோனை அடையாளம் காணலாம். பயனற்ற சொற்களை எங்கும் எவ்விடத்தும் பயன்படுத்துவதால் எவ்வித நன்மையும் தோன்றாது. மேலும் தன்னிடமுள்ள சிறப்பும் தன்னைவிட்டு நீங்கிவிடும் என்பதை அறிந்து வாழ்வோம்.

நல்ல பண்புடையோர் நல்ல நெறிவாழ்வோர் பயனற்ற சொற்களைப் புழங்குவாராயின் அவரிடமுள்ள சிறந்த பண்புகளும் சிறப்பும் அவரை விட்டுத்தானே விலகிவிடும் என்பதறிந்து பயனற்ற சொற்களைப் பயன்படுத்தாது வாழ்வோம்.

**பயனற்ற சொற்களைப் பாராட்டுவோர் சமுதாயத்தில் இழிநிலை அடைவர் என்பதறிவோம்:**

ஆண்மகன் என்போன் சிறந்த நல்லொழுக்கங்களின் சிகரமாக விளங்கும் ஆண்மையாளனாய் இருப்பது இயல்பாகும். மக்களுள் ஆண்மகனாக விளங்குபவன் பயனில்லாச் சொற்களைப் பேசாதவனாக இருத்தல் வேண்டும். அவ்வாறு பேசினால் நெற்கதிரிலுள்ள நெல்களினூடே இருக்கும் கருக்காய் எனப்படும் பதரைப் போல மக்களில் பதரானவன் என்பதை அறிந்து வாழ்வோம்.

சான்றோர் எனத்திகழும் அறிவுசான்றோர் அறமற்ற சொற்களை ஒருசில சூழலில் தப்பித்தவறி பேசிடலாம் ஆனால் பயனற்ற சொற்களை ஒருபோதும் பேசாமலிருப்பது நன்மையைத்தரும் என்பதறிந்து வாழ்வோம்.

சொல்லாலும் பேச்சாலும் செயலாலும் மக்களுக்கு அருமையான பயன்கள் விளைய வேண்டும் என்று ஆய்ந்தறிந்து இயங்கும் ஆற்றல் வல்லோர் பயனற்ற சொற்களை ஒருபோதும் பேசாது இருப்பர். அறியாமை நீங்கிய அறிவுசால் குற்றமில்லா ஆற்றல் வல்லோர் பயனற்ற சொற்களை மறந்துகூடப் பயன்படுத்தாது மிளிர்வர் என்பதறிந்து வாழ்வோம்.

இவற்றையெல்லாம் கூர்ந்து நோக்கும்போது தம் வாழ்வில் ஒவ்வொருவரும் பயனுடைய சொற்களை மட்டுமே பேசி மக்களுக்குப் பயனுடையவராக விளங்குதல் வேண்டும். பயனற்ற சொற்களைப்பேசி தானும் யாரும் சிக்கலில்

*சிக்கித் தவிப்பதைத் தவிர்த்து வாழ்வது சிறப்புடைமை என்பதறிந்து வாழ்வியலில் பயனற்ற சொற்களைப் பேசுவதைத் தவிர்த்து இன்புற்று வாழும் தன்மைக்கு இல்லறவியல் வழியாக வழியறிந்து வாழ்வோம்.*

***கள்ளாமை வழி வாழ்வியலில் திருடும் இயல்பு தவறானது என்றறிந்து வாழ்வோம்:***

*களவு+ஆ+மை கள்ளாமை களவு+ஆமை எனக்கொள்வோம். இல்லற வாழ்வை முடித்துத் துறவறம் எனப்படும் பிறர்நலன் நோக்கும் சமுதாய வாழ்வை வாழும் வழிமுறையை வழங்கிப் பின்பற்றச் செய்கிறார். ஒவ்வொரு தனிமனிதனும் கூடி வாழும் இயல்புடையவனாகவே விளங்குகிறான். அதில் இல்லறத்திற்கு அடுத்து பற்றின்மை எனப்படும் துறவறம் மேலோங்கி நிற்பது நல்வாழ்விற்கு வழிவகுக்கும் என்பதைத் தெளிவுபடுத்துகிறார். பிறர் பொருளை அவர் அறியாமல் திருடுவது களவாடுதல் ஆகும். அந்தத் திருட்டுத்தன்மை இல்லாத வாழ்வு பெருவாழ்வு என்பதை வெளிப்படுத்திப் பற்றற்ற நிலைக்கு நம்மை உயர்த்துகிறார். களவாமையை விரட்டி வாழ்வோம்.*



*மனம்தான் நமக்கு மயக்கத்தைத் தருவதாகும். பிறர் பொருள்மீது பற்று கொண்டு திருடுகின்ற மனதைக் நம் கட்டுக்குள் வைத்துக்கொள்ள வேண்டும். இதனால் யாரொருவரும் பழிக்க இயலாத நிலையை நம்மால் அடையமுடியும். சமுதாயத்தில் நாமும் தலை உயர்த்தி நடைபோடமுடியும் என்பதைத் தெளிந்து வாழ்வோம்.*

*பிறர்க்குச் சொந்தமான பொருளை அவர் அறியாவண்ணம் கள்ளத்தனமாய் கவர்ந்து விடுவோம் என்று மனதில் நினைப்பதே மிகப்பெரிய குற்றம் என்பதை உணர்ந்து வாழ்வோம்.*

*களவின்வழி ஏராளமான செல்வத்தைக் கொள்ளையடித்துச் சேமித்து வைத்தாலும் அது யாரொருவருக்கும் பயனுடையாதவும் இருக்காது. அச்செல்வம் பெரிதாக வளர்வதுபோல் தோன்றிக் கொண்டே இருந்து ஒருசிறிதும் இல்லாமல் காணாமல் போய்விடும். களவினால் வரும் செல்வம் வந்து குவிவதுபோல் இருக்கும் ஆனால் ஒருசிறிதும் இல்லாமல் தானே அழிந்துவிடும் என்பதறிந்து வாழ்வோம்.*

*களவு செய்வதில் ஆசைதோன்றி ஏராளமாய் களவு செய்தாலும் அதன் பயன் எத்தகையானதாய் இருக்கும் என்று பார்க்கும் போது அது இன்பத்தைத் தராமல் அழியாத பெருந்துன்பத்தைத் தந்துவிடும் என்பதால் களவாசைக்குச் சிறைவைத்து வாழ்வோம்.*

*பொருளை விரும்பிக் களவு செய்யக் காத்திருப்போர் பொருளுக்கு உரியவர் எப்போது சோர்ந்திருப்பர் என்று உற்றுநோக்கி உரிய நேரத்திற்காகக் காத்திருப்பர். இவர் கள்ளமனம் படைத்தவர் என அறிவோம். ஆனால் மக்களிடம் அருளைப் பெறவேண்டும் என்பதற்காக அன்புடையவர்களாக நடந்துகொண்டால் கள்ளமனம் ஒருபோதும் தோன்றாதிருக்கும் என்பதை உணர்ந்து அன்பை விதைத்து அருளை விளைவிக்க முயல்வோர் அருளாளர் ஆவர். சமுதாய வாழ்வில் அன்பும் அருளும் நன்மைகளைத் தருவதோடு நல்வாழ்வும் பெருகும் என்பதறிந்து வாழ்வோம்.*

***களவின்பால் அதிக ஆசையுடையோர் அடையும் அவலநிலை அறிவோம்:***

*களவின்பால் ஆசை உடையவரை அறிந்து கொள்வதற்கான வழி என்ன எனும் போது களவின்பால் அதிக ஆசை கொள்பவர் அளவறிந்து வாழும் வாழ்க்கையைப் பின்பற்றாதவராக இருப்பார் எனவே அவரிடமிருந்து விலகியிருத்தல் சிறப்பு என்பதை அறிந்து வாழ்வோம்.*

*அளவறிந்து வாழும் மனவலிமை கொண்டவர் எவரும் களவு செய்தல் என்னும் இருண்ட அறிவாண்மையைத் தன்னிடம் தங்க இடம் கொடாதவராய் இருப்பர். எனவே அளவறிந்து வாழ்வதில் நாட்டம் கொண்டு நல்வாழ்வு வாழ்வோம்.*

*ஒழுக்கம் மேன்மை சிறப்பு இவற்றால் மேலோங்கி வாழ்வோர் மனதில் எப்போதும் அறமானது தோன்றி அதற்கான செயல்முறைகளை இயக்கிக் கொண்டே இருக்கும். ஆனால் களவு செய்து வாழ்பவரின் நெஞ்சத்தில்*

வஞ்சகம் தானே வளர்ந்து இயங்கிக் கொண்டிருக்கும் என்பதை அறிந்து வாழ்வோம்.

எனக்குக் களவுசெய்து வாழும் வாழ்க்கை மட்டும்தான் தெரியும். மற்றபடி அறநெறி வாழ்வு வாழ்வது என்பது எனக்குத் தெரியாது என்று கூறுவோர் தன்னையறியாமல் அளவற்ற தீமைகளைச் செய்து இருக்கும் இடம் தெரியாமல் அழிந்து போவர். எனவே களவு நெஞ்சத்தை அழித்து அறநெறிக்கு வித்தாகும் அன்பை மனதில் வைத்து வாழ்வோம்.

களவு செய்து வாழ்வோர்க்கு உயிர் நிலைத்து நிற்காது. களவு செய்யாதவர்க்கும் உயிர் நிலைத்து நிற்காது ஆயினும் களவு செய்யாதார் தேவருலகம் சென்று சேருவர். என்பதறிந்து களவினை மனதில் எண்ணாத உறுதியான மனநிலை கொண்டு வாழ்வோம்.

**வெகுளாமை வழி சினம் எனும் கோபம் கொள்ளாதிருந்து வாழும் வகை அறிவோம்:**

வெகுள்+ஆ+மைà வெகுளாமை, வெகுள்+ஆமை என்று கொள்வோம். வெகுண்டெழுந்து சீரிப்பாயும் சினம் எனும் ஆமையை விரட்டி வாழ்வோம். கோபம் எனும் சினமானது ஒவ்வொரு மனிதருக்கும் தோன்றுகின்ற உணர்வாகும். யாருக்குச் சினம் தோன்றினும் அறிவு வேலைசெய்யாது நின்றுவிடும். அறிவு வேலை செய்யவில்லை எனில் எல்லாம் தீங்காகவே சென்று முடியும். வெகுளுதல் என்றால் சினந்து எழுதல் என்று பொருள். அதனை யாரொருவரும் செய்யாதிருந்து வாழ்வை வளப்படுத்திக் கொள்ளும் வழியைக் காட்டுகிறார். சினம் என்னும் ஆமையைக் கட்டிப்போடும் வழிவகைகளை அறிந்து வாழ்வோம்.

ஒவ்வொருவரும் தான் சினம் கொண்டால் அது எங்கெல்லாம் செல்லுபடியாகும் எங்கெல்லாம் செல்லுபடியாகாது என்பதை அறிந்திருப்போம். தன்னைநம்பி தனக்குக் கீழ் இருப்பவனிடம் சினம் செல்லுபடியாகும். தன்னினும் வலிமையானவரிடம் சினம் செல்லுபடியாகாது. அங்கு சினந்தால் தன்னிலைமை துன்பக்கடலில் மூழ்கிவிடும். இந்த இரண்டு நிலைகளையும் அறிந்திருக்கின்றவன் தன்னுடைய சினம் செல்லுபடி யாகும் இடத்தில் செலுத்தாது காத்துக் கொள்ளுதல் உயர்நிலைக்கு வழிவகுக்கும். மற்றிடங்களில் காத்தாலும் காக்கவிட்டாலும் சினம் கொள்வாருக்கு துன்பம் காத்திருக்கிறது என்பதை அறிந்து தெளிந்து வாழ்தல் வேண்டும்.

சினம் செல்லும் இடம் செல்லா இடம் என்ற இரண்டு இடங்களிலும் சினத்தைக் கொள்ளாதிருப்பது நன்மை தரும். இல்லை சினங்கொள்வேன் என்றால் இரு

*இடங்களிலும் சினத்தின் பயனாக தீமைகள் விளைந்து இன்னலுற நேரும் என்பதை அறிந்து வாழ்தல் வேண்டும்.*

*சினமா அப்படி என்றால் என்ன? எனக்கு அதைப்பற்றி ஒன்றும் தெரியாது என்று சினத்தை வாழ்வில் மறந்து வாழ்வோருக்கு நன்மைகள் விளையும். சினத்தை மறக்காது கொள்ளின் அதைவிடத் தீயது வேறெதுவும் இல்லை என்பதை அறிந்து வாழ்வோம்.*

*என்னப்பா உன் முகம் ஆயிரம் மின்னாற்றல் அலகு (வாட்சு) ஒளிவீசுகிறது. என்று ஒருவரைக் கேட்பின் உடனே அவர் மனதில் உள்ள மகிழ்வால் நம்மிடம் சிரித்து மகிழ்ச்சியை வெளிப்படுத்துவார் என்பதை நாம் நன்கு அறிவோம். ஆனால் அவருக்குச் சினம் தோன்றின் முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடிக்குமே அன்றி உவகையும் மகிழ்வும் சிரிப்பும் தோன்றாது. எனவே சினத்தை வேரறுத்து வாழ்வோம்.*

*சமுதாய வாழ்வியலில் ஒருவன் தன்னை நிலைநிறுத்திக்கொண்டு அன்போடும் நன்னெறியோடும் வாழ்பவன் என்ற பெயரெடுத்து வாழ விரும்புவானாயின் அவன் எச்சூழலிலும் சினத்தின் பிடியில் சிக்காது இருத்தல் வேண்டும். அவ்வாறு சினத்தைக் காத்துக்கொள்ள வேண்டும் சினத்தைக் காக்காவிட்டால் அது அவனையே கொன்றுவிடும் என்பதைத் தெளிந்து வாழ்வோம்.*

***சினம் சேர்ந்துவிட்டது எனில் நாம் அடையும் இரங்கத்தக்க நிலையை அறிவோம்:***

*சினம் என்பது கொழுந்துவிட்டு எரியும் நெருப்பு போன்றதாகும். அதற்கு அழிக்க மட்டுமே தெரியுமே அன்றி ஆக்குதற்குத் தெரிவதில்லை. நம்மைத் துன்ப ஆற்றில் தவிக்கும்போது நம்மைக் காக்கும் படகுபோல நம்மைக் காக்கின்ற சுற்றத்தையும் சினம் தோன்றினால் தன்னை அழிப்பதோடு அவர்களையும் அழித்துவிடும். எனவே சினத்தைச் சேரவிடாது வாழ்வோம்.*

*சினத்தைக் கொண்டே நான் பக்குவமாய் வாழ்வேன் என்று யாரேனும் எண்ணுபவர் இருந்தால் அவருடைய இரங்கத்தக்க நிலையை அறிவோம். சினத்தை ஒரு பொருளாக மதித்து அதனைக் கைக்கொண்டு வாழ்பவரின் நிலை அறிவோம். தம்முடைய கையால் தரையை ஓங்கி அடித்தால் அது தரைக்கு வலிக்கும் கைக்கு வலிக்காது என்று கூறுவதைப் போன்றதாகும். எனவே சினத்தால் நாம்தான் எல்லா நிலைகளிலும் இழப்பைச் சந்திக்கவேண்டி வரும் என்பதை அறிந்து வாழ்வோம்.*

*ஒருவன் நமக்குத் துன்பம் தருவதையே தன் முழுநேரப் பணியாகக் கொண்டிருக்கிறான். அவன் கொடுக்கின்ற துன்பமானது நன்றாக எரிகிற தீயிலே எண்ணெய்யை ஊற்றிவிட்டால் எவ்வாறு எரியுமோ அதுபோன்ற துன்பத்தைத்*

தருவதாக இருக்கிறது. அதற்கு மாற்றாக நாமும் அவன்மீது சினம் கொண்டு துன்பம் செய்யாதிருப்பது வாழ்வின் மிக உயர்ந்த நெறியாகும் என்று சினத்தை வீசியவன் மேல் குளிர்ந்த நீரை ஊற்றி இன்புறுத்தும் நெறியறிந்து வாழ்வோம்.

சினத்தை எப்படியெல்லாம் அடக்கி ஒடுக்க முடியுமோ அவ்வாறு அதனை இருக்கும் இடம் இல்லாமல் செய்து வாழ்வில் பயணிக்கும்போது நாம் என்னவெல்லாம் நினைக்கிறோமோ அவையாவும் உடனுடக்குடன் நம்மை வந்து அடைந்து கொண்டே இருக்கும். எனவே சினத்தை மறப்போம் துறப்போம் நினைத்ததை அடைந்து வாழ்வோம்.



சினம் கொண்டவர் யாரும் உயிருள்ளவரைப்போன்று இரக்கம் காட்டுவதில்லை அதனால் அவர் இறந்தவருக்கு ஒப்பானவராகவே விளங்குவார். சினத்தைத் துறந்தவர் துறவிகளுக்கு ஒப்பானவராக விளங்குவார். துறவறத்தால் சினத்தை நம் உள்ளத்திலிருந்து விரட்டியடிக்க முடியும் என்பதை இதன்வழி அறிந்து வாழ்வோம்.

**இன்னாசெய்யாமை வழி எவ்வுயிருக்கும் இன்னல் துன்பம் செய்யாமையை அறிவோம்:**

இன்னாமை+செய்+ஆ+மை இன்னாசெய்யாமை, இன்னாமை செய்யாத ஆமையை அறிவோம். வாழ்வியலில் பிறருக்குத் துன்பம் அல்லது இன்னல் உருவாக்காத வாழ்க்கை உலகில் சிறந்த வாழ்க்கையாகும். இந்த ஆமை நல்ல ஆமை யாருக்கும் துயரத்தை விளைவிக்காதே என்பதறிந்து வாழ்வோம்.

சமுதாயத்தில் வாழ்கின்ற மக்கள் குற்றம் செய்பவர்கள் அவர்களை விரும்புவோர் குற்றம் செய்யாமல் நன்மை செய்பவர்கள் நன்மையை விரும்புவோர் என்ற வகையினராகவே வாழ்கின்றனர். குற்றமற்றவர்கள் எனும்

நன்மை செய்பவர்களுக்கு ஒரு கொள்கை உண்டு. அக்கொள்கையானது எவ்வளவு சிறப்புமிக்க செல்வம் உடையவராய் இருப்பினும் பிறருக்கு எச்சூழலிலும் துன்பத்தைச் செய்யாமல் நன்மை செய்வது என்பதாகும். நாமும் அக்கொள்கையைப் பின்பற்றி வாழ்வோம்.

யாரேனும் சினங்கொண்டு நம்மைத் துன்புறுத்தினாலும் அதற்கு மாற்றாகக் குற்றமற்ற நன்மையைச் செய்பவர்கள் நன்மையையே செய்து மகிழ்விப்பர். நாம் யாருக்கும் துன்பம் செய்யாமல் அனைவருக்கும் நன்மையே செய்து கொண்டிருக்கிறோம். அச்சூழலில் மற்றவர் நமக்குத் துன்பம் செய்தால் அவர்களுக்கு நாம் தீங்கு செய்தல் கூடாது. மீறி தீங்கு செய்தால் அத்தீங்கு தீர்க்க இயலாத துன்பம் தரும் தீங்காக விளையும் என்பதறிந்து தவிர்த்து வாழ்வோம்.

நாம் நன்மையே செய்து கொண்டிருந்தாலும் ஒருசிலர் நமக்குத் துன்பத்தையே வழங்கிக் கொண்டிருப்பர். இவர்களைத் தண்டித்தாவது திருத்தவேண்டும் என்ற எண்ணம் தானே தோன்றிவிடுகிறது. அதை எவ்வாறு செய்வது என்று எண்ணிப் பார்க்கையில் தீமை செய்தவர் வெட்கமடையுமாறு அவருக்கு நன்மையைச் செய்வது சிறந்த தண்டனையாகும். நன்மையே தீமைக்குத் தண்டனை என்பதறிந்து வாழ்வோம்.

மனிதர்கள் ஆறறிவு உடையவர்கள். ஆறாவது அறிவு சிந்தித்துச் செயல்படும் அறிவாகும். இதனைப் பேச்சு வழக்கில் முன்பின் பார்த்து பேசவேண்டும் என்று குறிப்பிடுவர். இதனைத் தான் அறிவு என்று பல்லோராலும் வழங்கப்படுகிறது. இந்த அறிவின் வழி பிறருக்கு உண்டாக்கும் தீங்கின் வழி உண்டாகும் துன்பத்தை வலியை தனக்குற்றதாக எண்ணி யாருக்கும் துன்பம் செய்வதைத் தவிர்த்து வாழ்வோம்.

**எவற்றைச் செய்யாமல் தவிர்த்தால் இன்னா செய்யாமை இனிதானதாகும் அறிவோம்:**

துன்பம் தருபவை எவை என்று ஒரு பட்டியலை உருவாக்கி அவற்றை நாம் பிறருக்குச் செய்யாமல் இருத்தல் இனிப்பானதாகும்.

மனவருத்தம் தரும் எந்த ஒரு சிறு செயலையும் எவரிடமும் எப்போதும் துளியளவும் செய்யாதிருத்தல் சிறப்போடு இனிப்பானதாகும்.

தன்னுடைய உயிருக்குத் தீங்கு தருவன எவை என்ற பட்டியலை உருவாக்கி வைத்துக் கொள்ளல் வேண்டும். பின்னர் அதனை யாருக்கும் செய்யாமல் தவிர்த்தல் வேண்டும். இத்தகு அறிவுளோர் யாரொருவரும் பிறருக்குத் தீங்கு செய்யார் என்பது இனிப்பானதாகும்.

*பிறருக்குத் தீங்கினைக் காலையில் செய்வாய் ஆயின் மாலையில் அத்துன்பம் வேறொருவடிவில் செய்தவரைத் தானே வந்தடையும். அதனால் துன்பம் செய்தல் துன்பமாய் திரும்ப வரும் என்பதறிந்து வாழ்வது இனிப்பானதாகும்.*

*துன்பங்கள் யாவும் பிற உயிர்களுக்குத் துன்பங்களைச் செய்தவர்களுக்கே உண்டாகும். எனவே துன்பம் இல்லாது வாழ விரும்புவோர் பிறருக்குத் துன்பம் செய்யாது வாழ்வர். ஆதலால் நன்மையும் இன்பமும் செய்து வாழ்ந்து நலத்தையும் மகிழ்வையும் வளர்த்தெடுத்து வாழ்வர் என்பது இனிப்பானதாகும். இன்னா செய்யாமை வாழ்வில் இன்பத்தை உருவாக்கும் என்பதறிந்து வாழ்வோம்.*

***கொல்லாமை எனும் உயிர்க்கொலை செய்யாமையை நல்லதோர் ஆமையாக அறிவோம்:***

*ஓர் உயிரைக் கொன்று அதன் ஊனை உணவாகக் கொள்ளுதல் மக்கள் இனத்திடையே இருந்து வருவதாகும். மக்கள் அனைவரும் ஊனைப் பற்றி மட்டுமே எண்ணுகின்றர். அந்த ஊனுள் உயிர் இருந்ததைப்பற்றி கருத்தில் கொள்வதில்லை. அதனை நினைவூட்டிக் கொல்லாமையின் சிறப்புகளை அறிந்து வாழ்வோம்.*

*மக்கள் வாழ்வியல் நெறிமுறையில் தலைமையானதாக விளங்கும் அறச்செயல் என்பது எந்த ஒரு சிறு உயிரையும் கொல்லாது வாழ்தலாகும். எந்த ஓர் உயிரையும் கொன்றால் தினை விதைத்தவன் தினையை அறுவடை செய்தல் போல அதற்குரிய பழிபாவங்களை ஒவ்வொருவரும் அடையவேண்டி வரும் என்பதை நினைவில் கொண்டு கொல்லுதலைத் தவிர்த்து வாழ்தல் வேண்டும் என்பதறிந்து வாழ்வோம்.*

*மக்கள் வாழ்முறைகளுக்கான அறங்களை எடுத்துரைத்து வாழ்வியலில் நன்னடை நல்கும் நூல்கள் ஒரு சிறந்த வாழ்முறையைச் சிறப்பானதாக எடுத்துரைக்கிறது. நம்மிடம் உள்ள உணவினை அங்கு உள்ள உயிரினங்கள் அனைவருக்கும் பகிர்ந்து அளித்து உயிரைக் காத்து வாழ்தல் சிறப்பாகும் என்கிறது. அங்கு கொல்லுதல் குறித்து ஏதும் குறிப்பிடவில்லை. ஆனால், காத்தலைப்பற்றியே குறிப்பிடுவதால் கொல்லாமை இல்லாத நிலையை உருவாக்குதல் வேண்டும் என்பதை அறிந்து வாழ்வோம்.*

*வாழ்வியல் அறங்களுள் தலைமையானது இரண்டாகும். ஒன்று பிற உயிர்களைக் கொல்லாது வாழ்தல் வேண்டும். மற்றது பொய்பேசாது வாழ்தல் வேண்டும் என்கிறார். கொல்லாமை நல்லறங்களுள் தலைமையானது என அறிந்து வாழ்வோம்.*

வாழ்க்கையை வாழ்கின்ற நல்லாறு எனப்படும் நல்வழி எது என்ற வினாவினை எழுப்பி விடையளிக்கிறார். அதில் எந்த ஒரு உயிரையும் கொல்லாமை இல்லாத வழியே நல்வழி என்பதை முன்னிறுத்துகிறார். கொல்லாமை இல்லாத உலகியல் வாழ்வை அமைத்து வாழ்வோம்.

மக்கள் வாழ்க்கையில் தீங்கு செய்தால் செய்தவருக்குத் தீங்கு தானே வந்து சேரும் என்பதை அறிந்துள்ளனர். தீங்கினால் துன்பம் பெருக்கெடுக்கும் என்பதால் யாரொருவரும் தீங்கு செய்வதிலிருந்து விலகிச்சென்று வாழ்கின்றனர். அதைப் போலவே கொலைப் பாவத்திற்கு அஞ்சி அதனைச் செய்யாது கொல்லாமையை மேற்கொள்ளுவோர் வாழ்வில் சிறந்த உயர்நெறியாளராகத் திகழ்வர் என்பதறிந்து வாழ்வோம்.



**கொல்லாமையைப் பின்பற்றி வாழ்வோர் அடையும் உறுதிநிலைகளை அறிவோம்:**

கொல்லாமையைத் தன்வாழ்நாளில் பின்பற்றி வாழ்ந்தொழுகும் நல்வழியாளனைக் கொல்வதற்கு எமன்கூட சிறிது சிந்தித்து விலகிச் சென்றுவிடுவான். கொல்லாமையால் வாழ்நாள் குன்றாது நீண்டு வாழ்தல் எமனின் அருள் என்பதை நினைவூட்டிக் கொல்லாமையின் சிறப்பை அறிந்து வாழ்வோம்.

பிற உயிர்களைக் கொன்றால்தான் தன்னுடைய உயிரைக் காப்பாற்றிக் கொள்ளமுடியும் என்னும் நிலை ஏற்படினும் தன்னுயிரைப்பற்றி கவலை கொள்ளாது பிறஉயிர்களைக் காத்தல் வேண்டுமே அன்றி கொல்லுதல் கூடாது. இதனால் கொல்லாமை என்னும் உயர்நிலையை அடைந்து வாழ்வோம்.

தன்னுடைய வாழ்நாளுக்கான செல்வம் அத்தனையும் பெறுகின்ற வாய்ப்பு அமைகிறது. அதற்காக ஒரு கொலை செய்துதான் பெறவேண்டிய நிலை

உள்ளது. அவ்வாறு உயிரைக் கொன்று பெறுகின்ற செல்வம் இழிநிலையை வழங்குமே அன்றி உயர்நிலையை வழங்காது என்பதறிந்து வாழ்வோம்.

கொலையைத் தொழிலாகச்செய்து வாழும் மக்களும் உலகில் உள்ளனர். அவர்களை எவ்வாறு அழைப்பது என்றால் அவர்கள் மக்கள் அல்லர் அவர்கள் மாக்கள் எனும் விலங்கினத்தார் ஆவர். உலகியல் வாழ்வில் மக்களினமாய் உயர்ந்து வாழும் நெறியை வழங்குவது கொல்லாமை என்பதை உணர்ந்தறிந்து வாழ்வோம்.

மக்களின் வாழ்க்கையில் தீர்க்க முடியாத நோய்களால் துவண்டு துன்புற்றுக் கொண்டிருப்பவர்களைக் காண்கிறோம். வறுமையால் வாடிக் களைத்து வாழ்ந்து வருபவர்களையும் காண்கிறோம். இவர்கள் ஏன் மற்றவர்களிலிருந்து இத்தகைய இழிநிலையை அடைந்து வாழ்கின்றனர் என்பதை ஆய்ந்தால் அவர்கள் கொல்வதைத் தொழிலாகக் கொண்டவர்களாக இருந்திருப்பர்.



எனவே கொல்லுதல் நோயையும் வறுமையையும் தரும். கொல்லாமை மக்களிடையே உயர்ந்த நிலையையும் நோயில்லா வாழ்வையும் வறுமையில்லா செல்வத்தையும் பெறமுடியும் என்பதறிந்து வாழ்வோம்.

**நிலையாமை எனும் ஆமையை அறியாது வாழ்வதுதான் உலகியல் வாழ்வு அறிவோம்:**

நிலை+ஆ+மை à நிலை+ஆமை. இந்த ஆமையை மனதுள் வைத்து வாழ்வோம். உலகில் உயிராய்த் தோன்றியவுடன் தன்னலம் பொதுநலம் என்ற இரண்டு நிலைகளை அடைவது வாழ்வின் இலக்காக விளங்குகிறது. இதில் தன்னலம் என்பது இருக்கும் யாவையும் தனக்கே அன்றி பிறர்க்கானது இல்லை எனும்

தோற்றமாகும். பொதுநலம் என்பது இல்லறவியலைக் கடந்தபின் துறவறநிலை என்று வரும்போது உலகம் பொதுவானது இங்குள்ள யாவும் உலகோர் அனைவருக்கும் உரித்தானது என்கிற பொதுநல எண்ணம் தோன்றும். இப்போது நிலையாமையை உணர்ந்து பொதுநலத்துள் சென்று மக்களுக்கு உதவும் பண்பை வளர்த்து வாழ்வோம்.

மக்களுக்கு அறிவு என்பது ஒரேநாளில் தோன்றிவிடுவதில்லை. அறிவு கற்றலின் வழியாகவும் வாழ்க்கையைத் துய்த்தலின் போது படுவனவற்றின் வழியாகவும் தோன்றுவதை நாம் அறிவோம். உலகில் நிலைத்த பொருள் என்று எதுவும் இல்லை. இது உடனே அறிதல் இயலாது. வாழ்க்கைப் பட்டறிவின் வழியாக இவற்றை அறிதல் முடியும். நிலைத்தபொருள் உண்டு என்று எண்ணுவது வாழ்வது மயங்குகின்ற எளிய மிகச்சிறிய அறிவுடையவரின் இழிவான செயலாகவே விளங்கும் என்பதைப் புரிந்து வாழ்வோம்.

மக்கள் அனைவரும் செல்வத்தைத் தேடிக்குவித்து அதன் மீதமர்ந்து இன்பவாழ்வு வாழவேண்டுமென்று இரவு பகல் பாராது ஓடிக்கொண்டிருக்கின்றனர். தேடுவதிலேயே இளமை கழிந்துவிடுகிறது. அதனால் இளமை இன்பங்களைப் பெற முடியவில்லையே என்று பின்னாளில் எண்ணவேண்டி உள்ளது. செல்வம் நிலையானதன்று. அது கூத்தாடுகின்ற அவையில் அதனைக் காண மக்கள் கூடுவதைப் போன்று கூடிக் கொண்டே இருந்து பின் கூத்து முடிந்தவுடன் அவை வெற்றென மாறிவிடுவதுபோல் செல்வம் இருந்த இடம் தெரியாமல் சென்றுவிடும். இத்தகு இயல்புடைய செல்வத்திற்காக அலைய வேண்டாம் வேண்டியதைத்தேடி கிடைத்ததைப் பெற்று துய்க்க முடிந்ததைத் துய்த்து நிலையாமை எண்ணி இன்புறு வாழ்வோம்.

செல்வம் என்பது நம்மிடம் சேர்ந்திருக்கும்போதே அறச்செயல்களுக்கு அதனைச் செலவிடல் மிகவும் சிறப்புடையதாகும். ஏனெனில் செல்வம் எப்போது நம்மைவிட்டுச் செல்லும் என்பது தெரியாது செல்வம் நிலையாமை உடையது என்பதறிந்து அறம்செய்து வாழ்வோம்.

பிறந்தநாள் கொண்டாட்டம் நாள்தோறும் ஏதோ வெற்றிவிழாபோல் கொண்டாடப் படுகிறது. பிறந்தநாள் என்பது நாம் உலகில் தோன்றி நாம் உயிர்வாழும் நாள்கணக்கில் குறைந்து கொண்டிருக்கிறது என்று பொருள். ஆனால் நாம் யாரும் அதனை உணர்தல் இல்லை. இந்த நாள் என்பது நம் உடலிலுள்ள உயிரை அறுக்கின்ற நாளைக் கணக்கிட்டுக் கொண்டிருக்கும் வாள் என்பதை நினைவில் நிறுத்துவோம். அதற்கேற்ப காலத்தின் நிலையாமையை உணர்ந்து பலருக்கும் உதவி வாழ்வோம்.

நம் உயிரை எமன் பறிக்கும் நாள் நெருங்கிவிட்டது. வாயில் உள்ள நாக்கு குழறுகிறது. தெளிவாகப் பேசமுடியவில்லை. அதன் பின்னர் விக்கல் ஏற்படுகிறது. அந்நிலை உடலைவிட்டு உயிர்பிரியும் நிலையில் தோன்றும் அறிகுறியாகும். இதனை நாம் ஒவ்வொருவரும் எண்ணிப்பார்த்து இவை தோன்றுமுன் மக்களுக்கான நற்செயல்களை விரைந்து செய்து முடித்திட முயன்று வாழ்வோம்.

***நிலையாமையால் தோன்றும் உலகியல் நிலை அறிந்து வாழ்வோம்:***

நிலையாமையை அறிந்தகொள்வது நமது கடமையாகும். நேற்றுதான் நம்மிடம் நன்றாகப் பேசிச்சென்றார். யாருக்கு என்னவேண்டும் என்று கேட்டு அதற்குரியன செய்து சென்றார். ஆனால் இன்று அவர் உயிரோடு இல்லாமல் போய்விட்டாரே என்று நிலையாமை குறித்து இறப்பு நிகழ்வுகளில் பேசக் கேட்கிறோம். ஆனால் அந் நிலையாமையை யாரும் உணர்வதில்லை. உலகில் வாழ்வியலின் நிலையாமையை உணர்ந்து வாழ்வோம்.

நாம் உயிரோடு வாழும் காலத்தை யாரும் அறிந்துகொள்ள முயல்வதில்லை. ஆனால் பல கோடி எண்ணங்களைச் செயல்படுத்தப் பட்டியலிடுவதைக் காண்கிறோம். பட்டியலில் உள்ளனவற்றில் எந்த அளவு விரைவாகச் செயல்பாட்டிற்குக் கொண்டு வந்தால்தான் நாம் நிலையாமையை உணர்ந்திருப்பதின் அடையாளமாகும் என்பதறிந்து வாழ்வோம்.

உலகியியலில் உடலுக்கும் உயிருக்கும் உள்ள தொடர்பு என்பது எவ்வளவு காலம் என்பதை ஆய்ந்து பார்க்கும் ஆற்றல் நம்மிடம் உண்டு. ஒரு பறவையை வளர்க்கிறோம். அது முட்டைபோடுகிறது. அம்முட்டையை அடைகாக்கிறது. ஒருநாள் அந்த முட்டையிலிருந்து குஞ்சு வெளியேறிவிடுகிறது. அதுபோலத்தான் நம்முடைய உடலுக்கும் உயிருக்கும் உள்ள தொடர்பு



என்பதறிவோம். உயிர் உடலின் நிலையாமையை நாம் உணர்ந்தால் உலகியலில் நாமும் மக்களும் நல்வாழ்வு வாழ்வோம்.



சாக்காடு என்னும் இறப்பு குறித்து நாம் அறிந்து கொள்ளல் வேண்டும். நாம் இரவு உணவு உண்டு உறங்கச் செல்கிறோம். நன்கு ஆழ்ந்த உறக்கம் கொள்கிறோம். நமக்கு அருகில் நடப்பது எதையும் அறியாமல் உறங்குகிறோம். சாக்காடு என்னும் இறப்பும் நமக்குப் பக்கத்தில் என்ன நடக்கிறது என்று அறிய இயலாமையே என்று அறிதல் வேண்டும். பிறப்பு என்பது என்ன எனில் உறங்கிக் கிடந்தவன் காலையில் புத்துணர்வுடன் எழுந்து கொள்வதைப் போன்றதாகும். உயிருக்கும் உடலுக்கும் உள்ள நிலையாமையை உணர்ந்து நன்னெறி சார்ந்து நன்மைசெய்து வாழ்வோம்.

நம்முடைய உடலில் உயிர் எங்கிருக்கிறது. எந்த அறையில் உள்ளது என்று நம்மால் அறிய இயலாத வகையில் இருப்பதை அறிவோம். நிலைத்த தன்மையை உடைய உயிர் தங்குவதற்கு எந்த இடமும் இல்லை. நிலையில்லாத பல்வேறு உடல்களில் தங்கி வாழ்ந்து மடிவதே உயிரின் இயல்பாகும். உயிர் நிலைத்த தன்மை உடையது அதைப் போற்றிக் காக்க நாம் எதுவும் செய்வதில்லை. ஆனால் நிலையில்லாத உடல் தோற்றத்திற்கு நாம் செய்வன அளவிடற்கரியது என்பதை உணர்த்தி நிலையாமையை உணர்த்திச் செல்வதை அறிந்து வாழ்வோம்.

உலகியல் நிலையாமையால் அமைந்துள்ளது. கிடைத்த வாய்ப்பைப் பயன்படுத்தி நிலையில்லாத உலகில் நிலைத்த செயல்களைச் செய்து வாழ்ந்திட வழிவகைகாட்டி நம்மை ஆள்கிறார். இந்த ஆமைகள் தீமையைக் காட்டிலும் நன்மையையே நமக்கு உணர்த்துகின்றன. ஆமை சொல் கேட்போம். அதன்வழிநடந்து உலகியலில் சிறப்போம்.

(தொடரும்)

# திருவாதவூர் கல்வெட்டுகள்

**முனைவர் ப. தேவி அறிவுச் செல்வம்,**

*கோயில் கட்டிடக்கலை மற்றும்
சிற்பத்துறை கள ஆய்வாளர்*



*மதுரையிலிருந்து 20 கிலோமீட்டர் தொலைவில் இருப்பது அருள்மிகு திருமறைநாத சுவாமி கோயில். இக்கோயிலில் 56 கல்வெட்டுகள் உள்ளன. இக்கோயிலில் முதலாம் மாறவர்ம சுந்தரபாண்டியன், மாறவர்ம குலசேகரன், மாறவர்ம வீரபாண்டியன், பராக்கிரம பாண்டியன், சுல்தானியர்கள் காலத்தில் ஆட்சி செய்த வீரபாண்டியன், இரண்டாம் மாறவர்ம சுந்தரபாண்டியன், நாயக்கர்கள், குப்பையர் போன்றவர்களின் கல்வெட்டுகள் காணப்படுகின்றன. இக் கோயிலில் கிபி 1216 இல் முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன், சடையவர்ம குலசேகரன், மாறவர்ம விக்ரம பாண்டியன், வீரபாண்டியன் போன்ற மன்னர்களின் மெய்க்கீர்த்திகள் உள்ளன.*

*இக் கோயிலில் தேவரடியாள் குழைஞ்சாள் அரசனான ஆலால சுந்தரநங்கை, சந்திரசேகர், கௌரிக்குச் செப்புத் திருமேனி செய்வித்து திருவீதி உலா வரச் செய்துள்ளார். கூத்தாண்டாள் மகள் அழகியநாச்சி என்பவரும் இக்கோயிலுக்கு தானம் அளித்துள்ளார். போர் குடிகள் இப் பகுதியில் இருந்துள்ளனர். அரசன் அழைத்தால் எந்நேரமும் போருக்கு வரவேண்டும் என்று படை வீரர்களுக்கு இலுப்பை குடி, பள்ளி குறிச்சி என்ற இரண்டு படைப் பற்று ஊர் மானியமாகவும் அளிக்கப் பட்டிருந்தது. இவற்றை படைக்காரணவர் என்பவர் நிர்வகித்துள்ளார் . பிற்காலப் பாண்டியர் காலத்தில் அரசனுக்கும் ஊர்களுக்கும் இடையே தொடர்பாளராக இருந்த நாடாள்வான் என்ற அரசு அலுவலர்கள் உள்நாட்டுப் பிரிவுகளில் பணியாற்றி இருக்கின்றனர். திருவாதவூர் பகுதியில் களவழி நாடாள்வான் என்பவர் அரசு அலுவலராக இருந்துள்ளார் என்பதை சடைய வர்ம குலசேகர பாண்டியனின் கல்வெட்டு தெரிவிக்கிறது.*

*முதலாம் மாறவர்ம சுந்தரபாண்டியன் காலத்தில் சைவ மடம் ஒன்றும் இருந்துள்ளது. இதன் தலைவரான பராக்கிரமத் தேவர் காலத்தில் அம்பலத்தாடி ஊர் இம் மடத்திற்காக அளிக்கப்பட்டுள்ளது. கி பி 13ம் நூற்றாண்டு மாறவர்மன் பெருமாளையும், நாச்சியாரையும் எழுந்தருள்வித்துள்ளார். பிற்காலப் பாண்டியர் காலத்தில் பிள்ளையாரினை இராச கண்ட கோபாலர் செய்யப் பெருமாள் என்பவரும், சுப்பிரமணிய செய்யப் பெருமாள் ஆரணந் தொழ நின்றான் என்பவரும் இறை உருவத்தை எழுந்தருளி வித்துள்ளார்கள். கிபி 1315*

பராக்கிரம பாண்டியன் காலத்தில் செங்கழுநீர் பூ நாள் ஒன்றுக்கு முக்குறுணி பூவும், ஆண்டுக்கு 20 ஆயிரம் பூவும் அளிப்பதற்காக நில காணிக்கை கொடுக்கப்பட்டுள்ளது. 13ஆம் நூற்றாண்டில் திருவாபரணம் பழுது நீக்கக் கொடை அளிக்கப்பட்டுள்ளது. கிபி 14 ஆம் நூற்றாண்டில் மகாபலி வானாதிராயர் பெயரால் பங்குனித் திருவிழாவிற்கு இறையிலி கொடுத்துள்ளார்கள். ஸ்ரீ பாதம் தாங்கிகளுக்கு 8 பேர்களுக்கு நிலதானம், மாறவர்ம விக்ரம பாண்டியன் கிபி 1281 இல் கொடுத்துள்ளார்கள். விளக்கெரிக்க இராகுத்தன் குதிரை வீரன் 1298ஆம் ஆண்டில் 132 ஆடுகள் தானம் அளித்துள்ளார்.



பிற்காலப் பாண்டியர் தனது அண்ணன் பெயரால், அதாவது முதலாம் மாறவர்மன் குலசேகரன் பெயரால் சேரனை வென்றான் சந்தி என்பதை ஏற்படுத்தி உள்ளார். வலங்கை மீகாமன் சந்தி என்ற ஒன்றும் ஏற்படுத்தப்பட்டுள்ளதை இங்குள்ள கல்வெட்டு தெரிவிக்கிறது. வீரபாண்டியன் முகத்தலளவை, இருபத்து நாலடியான சுந்தரபாண்டியன் கோல், காலகண்ட தேவன் முகத்தல் அளவை போன்ற அளவு முறைகள் பற்றிய குறிப்பு இக் கல்வெட்டில் உள்ளது. 19ம் நூற்றாண்டில் பூக்கட்டும் பலகைக் கற்கள் பழனியாண்டி பண்டாரம் அவர்களால் தானம் கொடுக்கப்பட்டுள்ளன.

இக் கோயிலின் மிகவும் பழமையான கல்வெட்டு பன்னிரண்டாம் நூற்றாண்டைச் சேர்ந்த வீரபாண்டியன் கல்வெட்டு மற்றும் கடைசியாக 1961 இல் பரவை வீரபத்திரன் சேர்வை, மனைவி பாரி இருளாகி அவர்கள் அளித்த சுந்தரமூர்த்தி நாயனார், திருநாவுக்கரசு நாயனார், லட்சுமி சரஸ்வதிக்கான விக்கிரக ஸ்தாபனம் மற்றும் இரண்டாம் சுற்றுப் பிரகார கருங்கல் தள வரிசை திருப்பணி, நவக்கிரக பீடம், கும்பாபிஷேகம் செய்தது பற்றிய கல்வெட்டுகளுடன் இக் கோயில் கல்வெட்டுகள் நிறைவடைகிறது.

# பிரயோக சக்கரம் / எரிநிலை சக்கரம்



பெருமாளின் ஆயுதமாக இருப்பது சங்கு, சக்கரம், நாந்தகம் என்னும் வாள், சாரங்க எனும் வில், கௌமோதகி எனும் கதை. வலது மேல் கையில் சக்கரம், இடது மேல் கையில் சங்கு, வலது கீழ்கையில் கதை, இடது கீழ் கையில் சாரங்க வில் இடையில் நாந்தக வாள் ஆகியவை அணியாக இருக்கும். இதில் பெருமாளின் பிரதான ஆயுதமாகக் கருதப்படுவது சக்கரம். இந்த சக்கரமானது வலத் திருக்கரத்தில் ஆள்காட்டி விரலில் அமர்ந்து சுழன்று கொண்டு இருப்பது போல இருக்கும்.

சுக்கல யஜுர் வேதம், இந் தச் சக்கராயுதத்தை பற்றிப் பேசுகிறது. இந்தச் சக்கரம் அணியாக இல்லாமல் ஆயத்த நிலையில்/ செலுத்தும் நிலையில்/ பயன்படுத்தும் நிலையில்/ வெளிப்பார்த்த விளிம்பு நிலை/ எரி நிலையில் இருக்குமானால் அதற்குப் பிரயோகச் சக்கரம் என்று பெயர். அதாவது தீயவற்றை உடனடியாக அழிக்கப் புறப்படும் நிலையில் உள்ள சக்கரம். இந்த சக்கரமே சக்கரத்தாழ்வார் என்று வழிபடப்படும் திருவடியாகும்.



மதுரை இடையபட்டியில் உள்ள பாண்டியர் ஆட்சி கல்வெட்டு.

## பிற்கால பாண்டியர் ஆட்சி கல்வெட்டு கண்டுபிடிப்பு

**மதுரை, மே 16–**

மதுரை திருவாதவூர் அருகே இடையபட்டி கிராமத்தில் மாறவர்மன் குலசேகர பாண்டியனின் 43ம் ஆண்டு ஆட்சி கல்வெட்டை மதுரை தொல்லியல் ஆய்வாளர்கள், ஆர்வலர்கள் கண்டுபிடித்துள்ளனர்.

கோயில் கட்டடக்கலை சிற்பத்துறை ஆய்வாளர் தேவி, ஆர்வலர்கள் அறிவுச்செல்வம், கார்த்திக், தமிழ் தாசன் கூறியதாவது: பிற்கால பாண்டியரான மாறவர்மன் குலசேகர பாண்டியன் 1268ல் ஆட்சி செய்துள்ளார். இது குறித்த தகவல்களுடன் மாறவர்மன் குலசேகர பாண்டியனின் 43வது ஆண்டு ஆட்சி என்பதை கல்வெட்டு செய்தி கூறுகிறது.

கி.பி., 1311ல் செதுக்கப்பட்டுள்ள இக்கல்வெட்டில் 'திருப்பூவனம் உடைய நாயனார் கோயில் வீராசிங்க பேரயன்' என்று 5 வரிகள் கொண்ட சிறு துண்டு கல்வெட்டு மட்டும்கிடைத்துள்ளது. இதன் தொடர்ச்சி எங்கு இருக்கிறது என அப்பகுதியில் இனி ஆய்வு செய்து கண்டறியும் போது கல்வெட்டின் முழு விபரம் தெரிய வரும். இக்கல்வெட்டு செய்திகளை தொல்லியல் அறிஞர் சாந்தலிங்கம் வாசித்து தந்துள்ளார், என்றனர்.

திருமால் கோயிலுக்குரிய நிலங்களின் எல்லைக் கல்லாக திருமாலின் சக்கரம் செதுக்கப்பட்ட கல் பயன்படுத்தப்பட்டுள்ளது. பெருமாள் தனது அவதாரங்கள் பலவற்றில் துஷ்ட நிக்கிரகத்தைச் சக்கரம் மூலமே நிகழ்த்தியுள்ளார். கிருஷ்ணாவதாரத்தில் சிசுபாலனை வதைத்தது, குருசேத்திரத்தில் அர்ஜுனனின் சபதம் நிறைவேறிட சிறிது நேரம் சூரியனை மறைத்து நின்றது போன்றவை இச்சக்கரம் மூலமே நிகழ்த்தப்பட்டுள்ளது. பக்தர்களின்

துன்பங்களை அழிக்க அவர்களுக்குத் துன்பம் தருவோரை அழிக்க ஆயத்த நிலையில் பிரயோக நிலையில் வைத்திருப்பதாகக் கொள்ளலாம்.



இவ்வாறு சுழலும் நிலை சக்கரத்தில் இருந்து மாறுபட்ட பிரயோக நிலை சக்கரமானது தமிழகத்தில் எட்டாம் நூற்றாண்டிலிருந்து பல்லவர்கால சிற்பங்களிலும், பத்தாம் நூற்றாண்டு வாக்கில் பாண்டிய நாட்டுச் சிற்பங்களிலும் காணக்கிடைக்கின்றன. பெருமாள் திருமேனியில் மட்டுமல்லாது விஷ்ணு, துர்க்கை சிற்பங்களிலும் பிரயோக நிலை சக்கரம் காட்டப்பட்டுள்ளது.



பிரயோக நிலை சக்கரங்களைக் கொண்ட பெருமாள் திருமேனிகள் இருக்கும் இடங்கள்: அழகர் கோயில் மூலவர் சிற்பம், திருக்கூடலூர் அருள்மிகு ஸ்ரீ வையம் காத்த பெருமாள் கோயில், கடலூர் சிங்கிரிகுடி லட்சுமி நரசிம்மர் கோயில், வேலூர் மாவட்டம் திருக்கரபுரம் கரபுரீஸ்வரர் கோயில் மேற்கு கோஷ்டத்தில் அமர்ந்த நிலையில் மகாவிஷ்ணுவாக இருக்கிறார்.

# அழகர்

**பொன்னழகு பாப்பாத்தி மண்டகப்படி:**

*அழகர் கோயிலில் இருந்து வைகை ஆறு வரை அழகர் கிட்டத்தட்ட 1000 மண்டகப் படிகளுக்கு வந்து செல்வார். அதில் ஒரு பெண்ணிற்காக எடுக்கப்பட்ட நடுகல் கோயிலுக்கும் பல நூறு வருடங்களாக வந்து சென்று கொண்டிருக்கிறார்.*




*சோனை முத்தையா என்ற காவலாளி நாயக்கர் காலத்தில் மன்னரைக் காப்பாற்றும் பொழுது இறந்து விடுகிறார். அவரது மனைவி உடன் கட்டை ஏற விருப்பம் தெரிவிக்கும் பொழுது நாயக்க மன்னர் உடன்கட்டை ஏறுவதற்கான இடத்தைத் தந்து அவர்கள் வாரிசுகளுக்கும் உரிமையைக் கொடுத்துள்ளார். அதற்கான ஆவணங்கள் கோயில் அறங்காவலர்களிடம் இருக்கிறது. இந்த ஆவணம் தெலுங்கு மொழியில் எழுதப்பட்டுள்ளதாகத் தெரிகிறது. இதில் இருக்கும் சில வாசகங்களை இக் குடும்பப் பரம்பரையினர் தமது மாதாந்திர நாட்காட்டியில் அச்சிட்டுப் பயன்படுத்தி வருகின்றனர். உடன்கட்டை ஏறி உயிர்விட்ட பெண்ணிற்குப் பெருமை சேர்க்கும் வகையில் அப் பெண் உடன்கட்டை ஏறிய இடத்திற்கு இன்றும் அழகர் வந்து சென்று கொண்டிருக்கிறார்.*

*இருப்பிடம்: மதுரை ஆழ்வார் புரம் ஆற்றில் அழகர் இறங்கும் இடம் அருகில்.*

# பருத்தி: உலகிற்குத் தமிழர் கொடுத்த கொடை



**-- அ. திவ்யகுமாரி கண்ணம்மா**
*ஐயை உலகத் தமிழ் மகளிர் மன்றம்.*

*தென்னிந்தியாவின் பல துறைமுகப் பட்டணங்கள் மத்தியதரைக்கடல் பகுதியோடு பன்னெடும் காலமாகத் தொடர்பிலிருந்தன. மேற்குக் கடற்கரைத் துறைமுகங்களோடு மட்டுமல்லாமல் கிழக்குக் கடற்கரைத் துறைமுகங்களோடும் மத்தியதரைக்கடல் வணிகர்கள் தொடர்பிலிருந்தனர்.*

*மேற்குக் கடற்கரை மசாலாப் பொருட்களை ஏற்றுமதி செய்தது போல் கிழக்குக் கடற்கரைத் துறைமுகங்கள் பருத்தியும் முத்தும் பவளமும் ஏற்றுமதி செய்தன. சோழமண்டலக் கடற்கரையில் அமைந்துள்ள மற்ற துறைமுகங்களாகப் பெரிப்ளஸ் குறிப்பிடுவது புகார், புதுச்சேரி, சோபட்னா ( மரக்காணம்) ஆகியவை. அரிக்கமேடு ராமேஸ்வரம் மற்றும் ஆலங்குளம் ஆகிய துறைமுகங்களுக்கு ரோமானியக் கப்பல்கள் வர்த்தகத்திற்காக வந்தன. ஆலங்குளத்தில் கண்டுபிடிக்கப்பட்ட ரோமானியக் கப்பலின் சித்திரம் வரையப்பட்ட மண்பாண்டங்கள் இதனை உறுதிப்படுத்துகின்றன. இது கிழக்குக் கடற்கரையில் ரோமானிய கப்பல்களின் போக்குவரத்து இருந்ததற்கு ஒரு சான்றாகும். அதில் வரையப்பட்டுள்ள கப்பல், மூன்று பாய்மரங்களைக் கொண்டது, பொது யுகம் 1-3 நூற்றாண்டைச் சேர்ந்தது. இது இந்தியாவுக்கான நீண்ட தூரக் கடற் பயணத்திற்குப் பயன்படுத்தப்பட்ட மிகப்பெரிய ரோமானியக் கப்பலாகும். அரிக்க மேடு ஆலங்குளம் புகார் ஆகிய துறைமுகங்களிலும் உள்நாட்டுத் தலைநகரான மதுரையிலும், ரோமானியர்களின் குடியிருப்பு அதிகம் இருந்தன.*

*மேற் குறிப்பிட்ட துறைமுகங்களிலிருந்து உரோமுக்குப் பல பொருட்களோடு பருத்தியும் ஏற்றுமதி செய்யப்பட்டது. தென்னிந்தியாவிலிருந்து ஏற்றுமதி செய்யப்பட்ட பொருட்களில் மிக முக்கிய இடம் பிடித்தன பருத்தித் துணிகள்.*

*சங்கக்கால வணிகத்தில் துணி வகைகளுக்கு மிகவும் பேர் போன இடம் தமிழ்நாடு.*

*" ஆள்பாதி ஆடை பாதி "*
*" ஆடையில்லா மனிதன் அரைமனிதன் "*
*" தாயைப் போலப் பிள்ளை; நூலைப் போலச் சேலை "*

*என ஆடை தொடர்பான பழமொழிகள் ஏராளம்.*

*நூற்பு மற்றும் நெசவு ஆகியவை விவசாயத்திற்கு அடுத்ததாகப் பரவலாக நடைமுறைப்படுத்தப்பட்ட கைவினைச் செயல்களாக இருந்தன. நெசவு, பண்டைய தமிழ்நாட்டில் மிக முக்கியமான தொழிலாக இருந்தது.*



*நெசவு, மக்கள் பலரின் முழு நேரத் தொழிலாகவும் இருந்தது, பெண்கள் தங்கள் ஓய்வு நேரத்தை நெசவு செய்தும் செலவழித்தனர். தமிழ் நாட்டுப் பருத்தியை உலகெங்கிலும் விரும்பி உடுத்தக் காரணமாக இருந்தவர்கள், பருத்தி ஆடைகளை உலகெங்கும் வர்த்தகம் செய்த வணிகத் தமிழர்களே (அறுவை வணிகர்). பிரிட்டிஷ் காலத்திய தொழிற் புரட்சிக்கு முன்பு வரை கைகளால் நெசவு செய்யப்பட்ட ஆடைகளே உலகெங்கிலும் பயன்பாட்டிலிருந்தன.*

*தென்னிந்தியாவிலிருந்து ஏற்றுமதி செய்யப்பட்ட பொருட்களில் பருத்தித் துணி உடைகள் மிகவும் முக்கியமானவை. சங்கக் காலத்தில் சோழ மண்டலம் நெசவுத் தொழிலில் அதீத சிறப்புப் பெற்றிருந்தது. பெரிபுளூஸ் அவர்களால் வடக்கில் உள்நாட்டில் "அர்கரு" என்று குறிப்பிடப்படும் உறையூர் இருந்ததாகவும், அங்குக் கடற்கரையில் எடுக்கப்பட்ட முத்துக்கள் ஒன்று சேர்க்கப்பட்டன என்றும் திருச்சிராப்பள்ளியிலிருந்து அனுப்பப்பட்ட "அர்கரிடிக்" என்று குறிப்பிடப்படும் மென் துணியும், இங்கிருந்து உரோமுக்கு அனுப்பப்பட்டுள்ளதாகவும் அவர் கையேடுகளில் குறிப்பிடுகிறார்.*

*உறையூரின் பருத்தித் துணிக்கு மேற்கு நாடுகளுக்கிடையே அதிக தேவை இருந்தது. தமிழ்நாட்டிலிருந்து பருத்தித் துணி மட்டும் ஏற்றுமதி*

*செய்யப்படவில்லை. பருத்தி திணிக்கப்பட்ட மெத்தை, தலையணைகளும் ஏற்றுமதி செய்யப்பட்டன. நெசவு உடைகள் பலவற்றைப் பாலஸ்தீனமும், யவனமும் போட்டி போட்டுக்கொண்டு அதிக அளவில் வரவழைத்தன.*

*பருத்தியில் இரண்டு விதமான பஞ்சுகள் இருந்தன. ஒன்று பருத்திப் பஞ்சு; இரண்டாவது இலவம் பஞ்சு. பருத்தி, பஞ்சுச் செடியாக வளரக்கூடியது. இலவம் பஞ்சு மரத்தில் வளரும். இந்தப் பருத்திப் பஞ்சைக் கொட்டைப் பஞ்சு என்றும் கூறுவர். பருத்திக் கொட்டையை அக்காலங்களில் கொட்டை என்றே அடையாளப்படுத்தினர். இதனால் அயல்நாட்டவர் கொட்டைப் பஞ்சை கொட்டன் வூல் என்றனர். அரபு நாடுகளில் பருத்தியை " AL Qutun" என்று அழைத்தனர். இதுவே இன்று ஆங்கிலத்தில் ' cotton' "காட்டன்" ஆக மாறியுள்ளது.*

***இந்த உலகிற்கே பருத்தியை அறிமுகப்படுத்தியவர்கள் தமிழர்கள்:***

*7000 வருடங்களுக்கு முன்பே பருத்தி பயன்பாட்டிலிருந்திருக்க வேண்டும். மெசப்படோமியர்களும் பருத்தி உடையைத் தென்னிந்தியாவிலிருந்தே வாங்கியுள்ளனர்.*

*கி மு 3500ல் சிந்து சம வெளி நாகரிகத்தில் வாழ்ந்தவர்கள் உடுத்திய ஒரு சதுர பருத்தித் துணியின் எடை 4 அவுன்ஸ் என்று தொல்பொருள் ஆராய்ச்சியாளர் சர் ஜான் மார்சல் கணித்துக் கூறியுள்ளார். 5000 வருடங்களுக்கு முன்பே பருத்தித் துணியை எவ்வளவு நுண்ணிய நூலால் நெய்திருக்கிறார்கள் என்பதை அத்துணி காட்டுகிறது.*

*கி மு 543ல் விஜயன் இலங்கைக்கு வந்து இறங்கிய போது இயக்கரின் தலைவியான குவேனி மரத்திற்குக் கீழே 'நூல் நூற்றுக்கொண்டிருந்ததாக' கூறுகிறது மகாவம்சம்.*

*பருத்தி நெசவு முதன்முதல் இந்தியாவில்தான் செய்யப்பட்டதென்றும், அங்கிருந்தே மேனாடுகளுக்குப் பரவியதென்றும் தொல்லியல் ஆய்வாளர் சர் ஜான் மார்சல் கூறுகிறார்.*

*பருத்தி நூலாலும், மயிராலும், பட்டு நூலாலும் நெய்து பல நூறு அடுக்குகளாக அடுக்கி வைக்கப்பட்ட நறுமணம் நிறைந்த துணிகள் உள்ள கடைவீதியும் மதுரையில் இருந்ததாக,*

> *“நூலினும் மயிரினும் நுழைநூற் பட்டினும்*
> *பால்வகை தெரியாப் பன்னூறு அடுக்கத்து*
> *நறுமடி செறிந்த அறுவை வீதியும்”*

என்று சிலப்பதிகாரம் கூறுகிறது. கோடைக் காலத்தில் விளைந்த பஞ்சை மூட்டை மூட்டையாக வீடு நிறைய அடுக்கி வைத்திருந்ததை,

“கோடைப் பருத்தி வீடுநிறை பெய்த
மூடைப் பண்டம் மிடைநிறைந் தன்ன”

எனப் புறநானூறு கூறுகிறது.

சங்கக் காலப் பெண்கள் பருத்தியைப் பயிரிட்டு, அறுவடை செய்து மூட்டையாகக் கட்டிவைத்து, கொட்டைப் பஞ்சிலிருந்து பஞ்சைப் பிரித்தெடுத்து, நூல் நூற்று, நெசவு செய்ததைச் சங்க இலக்கியங்கள் மிகத் தெளிவாகவே காட்டுகின்றன. இப்படிப் பருத்தி பயிரிட்டு, நெசவு செய்த பெண்கள் ‘பருத்திப் பெண்டு’ என அழைக்கப்பட்டனர்.



கப்பலின் உருவம் வரையப்பட்ட பானையோடு. இடம்- அழகன் குளம்

சங்கக் காலத்தில் நெசவுத் தொழில் சிறப்படைந்து இருந்ததையும், சங்கக் காலப் பெண்கள் பொருளாதார மேம்பாட்டுக்கு மற்றவரை நம்பி வாழாமல் தங்கள் உழைப்பில் தற்சார்பு வாழ்வு வாழ்ந்ததையும் இதன் மூலம் அறிய முடிகிறது.

நூல் நூற்கும் பெண்கள் இரவு நேரத்திலும் கூட பஞ்சைப் புடைத்துச் சிறு தூறுகளைக் களைந்ததை,

“சிறையும் செற்றையும் புடையுநள் எழுந்த பருத்திப் பெண்டின் சிறுதீ விளக்கத்து”

என்றும்,

*“பருத்திப் பெண்டின் பனுவல் அன்ன”*

*எனக் கொட்டையை நீக்கி, மென்மையாக்கிப் பஞ்சு இழையைப் பிரித்து எடுத்ததை ‘பனுவல்’ எனவும்,*

*துணையற்ற பெண்கள் பிரித்து எடுத்த பஞ்சு இழை மிக மெல்லிதாக இருந்ததைப் புறநானூற்றுப் பாடல்களும்,*

*“ஆள் இல் பெண்டிர் தாளின் செய்த*
*நுணங்கு நுண் பனுவல்”*

*என அக்காலச் சூழலை நற்றிணையும் மிகத் தெளிவாகப் படம் பிடித்துக் காட்டுகின்றன..*

*அன்று முதல் இன்று வரை பெண்களின் பொருளாதாரத் தேவைகளுக்குப் பருத்தி பயன்படுத்தப்படுகிறது. கணவனை இழந்த பல நலிவடைந்த குடும்பப் பெண்கள், பொருளாதாரச் சூழல்களைத் தையல் தொழில் செய்து தற்சார்பாக வாழ்ந்தனர்.*

*இப்படிப் பிரித்தெடுத்த பஞ்சு, பின்னர் எஃகினால் ஆன வில் கொண்டு அடிக்கப்படும் பருத்தியில் கொட்டைகள் நீங்குவதோடு நூல் நூற்கும் வண்ணம் துரும்புகள் உருவாகும்.*

*" எஃகு உறு பஞ்சு இற்று ஆகி"*

*இத் துரும்பிழைகளைக் கொண்டு நூல் நூற்கப்படும். கொட்டை நீக்கப்பெற்ற பஞ்சுகள் பெண்ணின் பாதங்கள் போன்றும், மழைமேகங்கள் போன்றும் இருப்பதாக இலக்கியங்கள் கூறுகின்றன.*

*தமிழகத்தில் மேற்கொள்ளப்பட்ட பல தொல்லியல் ஆய்வுகளில் நூல் நூற்கும் தக்களிகள் கிடைத்துள்ளதால் தமிழகத்தில் நெசவுத் தொழில் ஓர் இன்றியமையாத தொழிலாகச் சங்கக் காலத்தில் விளங்கியுள்ளது எனலாம்.*

*சங்கக் காலத்தில் பருத்தி பாரம் எனவும் அழைக்கப்பட்டுள்ளது. சங்க இலக்கியமான குறிஞ்சிப்பாட்டில் பெண்கள் கொய்த 99 மலர்களின் பெயர்களைப் பட்டியல் இடும் கபிலர் பருத்திப் பூவின் பெயரை ‘பாரம்’ என்கிறார்.*

*“பாரம் பீரம் பைங்குருக் கத்தி”*

*பாரம் (பருத்தி) விளையும் நிலங்களுக்கு அருகில் சிறிய நீர்க் குட்டைகளும் இருந்துள்ளன.*

சங்கக் காலத்தில் பருத்தி உற்பத்திக்கென்றே ஊர்கள் இருந்திருக்கிறன. பருத்தி புன்செய்ப் பயிர்களாக இருந்திருக்கிறன. அவ்வூர்களின் தலைவர் சீறூர் மன்னன் என்று அழைக்கப்பட்டார் .

கி மு முதலாம் நூற்றாண்டில் வாழ்ந்த அதிகமானை,

"பருத்திவேலிச் சீறூர் மன்னன்" எனப் புறநானூறு கூறுகிறது.

பருத்தி ஆடைகளிலேயே முஸ்லின் (அ) மஸ்லீன் ஆடைக்கே அதிக மோகம் இருந்தது. மஸ்லீன் என்பது ஒரு வெற்று நெசவால் நெய்யப்பட்ட பருத்தி ஆடையாகும். இது உலகின் மிக மென்மையான மற்றும் லேசான கைத்தறி ஆடை ஆகும்.

" தலைவன் தமக்குப் புகையை ஒத்த துகில்"

அளித்ததாகப் புறநானூற்றில் தலைவி தோழியிடம் கூறுகிறாள்.

சங்கக் காலத்தில் அவை அறுவை, ஆடை, மடி, மடிவை, உடுக்கை, உடை, கச்சு, கச்சை, கம்பளம், கலிங்கம், காழகம், துகில், சிதர்வை, பட்டு, படம், படாஅம், மெய்ப்பை, போர்வை போன்ற பல பெயர் கொண்டு வழங்கப்பெற்றன. இவற்றில் சில ஆடைகள் சில துணி வகைகள்.

ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக இந்தத் துணிகள் உலகம் முழுவதும் விரும்பப்பட்டு வந்தன. சாயமிடுதல் நெசவுக்கு ஒரு துணைத் தொழிலாக இருந்தது. இடுப்புத் துணிக்கான நீலச் சாயம் மக்கள் மத்தியில் பிடித்த நிறமாக இருந்தது. பட்டு மற்றும் பருத்தித் துணிகளுக்குக் கூடுதலாக, சிராய் மரவுரி மற்றும் நர்மாடி எனப்படும் மர இழைகளால் செய்யப்பட்ட துணியும் (அங்கி) பலராலும் விரும்பப்பட்டது . மதுரை, உறையூர் சந்தைகளில் பருத்தி, பட்டுப் பொருட்களுடன் கம்பளிப் பொருட்களும் விற்கப்பட்டன. துணி உற்பத்தியாளர்கள் ஒரே நேரத்தில் நீண்ட துணிகளை நெய்து வியாபாரிகளுக்கு வழங்கினர். இவர்களை அறுவை வணிகர் என்றும் அவர்கள் வாழ்ந்த இடங்கள் அறுவை வீதி என்றும் அழைக்கப்பட்டன.

தமிழ்நாட்டுக் கோவில் சிற்பங்களில் பல சிற்பங்கள் மென்துகில் உடுத்தி இருப்பதைக் காணலாம். கோவில் சுவர் சித்திரங்களிலும், குகை சித்திரங்களிலும் கூட தெய்வங்கள் மற்றும் அரச குடும்பம் மென்துணி அணிந்திருப்பதைக் காணமுடியும். தஞ்சைக் கோவிலில் ராஜராஜரும் அவரது மூன்று மனைவியரும் ஈசனை வழிபடும் ஓர் சித்திரத்தில் அரசியர் உடுத்தி இருக்கும் உடையின் மென்மையைக் காண முடியும் .

பாம்புச்சட்டையைப்போன்ற மிகமெல்லிய பருத்தித் துணியையும் கலைவண்ணம் மிளிரும் பல பாணிகளில், பல தோரணைகளில் பட்டு நெய்யப்பட்டதாக இலக்கியப் பாடல்கள் குறிப்பிடுகின்றன.



பண்டைய கிரேக்கத்தில், தெய்வங்களின் சிலைகளுக்கு மஸ்லீன் ஆடைகள் அணிவிக்கப்பட்டன. பல நாடுகளின் பேரரசிகள் மஸ்லீன் ஆடைகளை அணிவதையே பெருமையாகக் கருதினர். மஸ்லீன் துணியில் பல வகைகள் இருந்தன. இதன் மென்மையால் ஈர்க்கப்பட்ட அயல் நாட்டு அரசவைக் கவிஞர்கள், இதனை நெய்யப்பட்ட காற்று என வர்ணித்தார்கள்.

பொருளாதார ரீதியாகவும் அதிகார ரீதியாகவும் செல்வாக்குள்ள மேலடுக்கு மக்கள் மஸ்லீன் ஆடைகளை உடுத்தினார்கள். இந்தத் துணிவகையின் தனிச் சிறப்பு என்னவென்றால், 300 அடி நீளமுள்ள ஒரு துணியை ஒரு மோதிரத்தின் உள்ளே நுழைத்து வெளியே எடுத்துவிடக்கூடிய அளவுக்கு மெல்லிதாக இருந்தது. 60 அடி நீளத் துணியை மடித்து ஒரு சிறிய தீப்பெட்டிக்குள் அடைத்துவிடலாம் . மஸ்லீன்கள் வெவ்வேறு வண்ணங்களின் மிக நேர்த்தியான மலர் வேலைப்பாடுகளைக் கொண்டு விளங்கின, பட்டுத் துணி, பட்டு நூல்களால் தயாரிக்கப்பட்டது. , அயல்நாட்டுப் பிரபுக்கள் பூவேலை செய்யப்பட்ட ஆடைகளுக்கு முக்கிய வாடிக்கையாளர்களாக இருந்தனர். அவற்றை மிகவும் விரும்பி அணிந்தனர். இப்படி எல்லாம் நம் மூதாதையர் பருத்தியிலிருந்து நூல் எடுத்து ஆடை நெய்து உடுத்தின காலத்தில் மேலை நாட்டினர் பருத்தியைப் பற்றி அறியாமல் இருந்தனர்.

கிரேக்க வரலாற்று ஆசிரியராகக் கருதப்படும் (கி மு 484ல்) ஹிரோடோடஸ் தென்னிந்தியாவின் பருத்தியைப் பற்றி,

"The Indians have a wild- growing tree which instead of fruit produces a species of wool similar to that of sheep, but of finer and better quality"

என்று எழுதினார் என "காட்டன் இன் த ஏன்சியன்ட் வேல்ட்" புத்தகத்தின் ஆசிரியர் குறிப்பிடுகிறார்.

மனிதன் நாகரீகம் அடைந்ததைக் குறிக்கும் முக்கிய அடையாளமே உடை அணிவது தான். அந்த நாகரீகத்தை உலகிற்கே கொடையாய் தந்தவர் தமிழர்கள்.

தொடரும்...

# தமிழ்ச் சித்தரியலும் கிறிஸ்தியலும் - 5

**பேரா. முனைவர் மோ. மைக்கேல் பாரடே**

*மேனாள் தமிழ்த்துறைத் தலைவர்,*
*சென்னைக் கிறித்தவக் கல்லூரி, தாம்பரம், சென்னை.*



*உலகப் பெருஞ் சமயமாய்த் திகழும் கிறித்து நெறியின் இறைக்கோட்பாடுகளுக்கும் உலகப் பெருமொழியாம் தமிழின் சமய - சமுதாயச் சீர்திருத்தச் சிந்தனையாளர்களாம் சித்தர்களின் அறநெறி - இறைநெறிக் கோட்பாடுகளுக்கும் உள்ள ஒப்புமைகளை ஆய்ந்தறியவும் அகழ்ந்து காணவும் முற்படுகிற நோக்கத்தோடுதான் இக்கட்டுரைத் தொடர் எழுதப்பட்டு வருகிறது.*

*இதற்கு முந்தின 4 பகுதிகளில் தமிழ்ச் சித்தர்களையும் சித்தர் இலக்கியங்களையும் பற்றிய பொதுவான அறிமுகத்துக்குப் பின், அவ்விலக்கியங்கள் கிறித்தவ மறைநூலான விவிலியம் பேசும் கோட்பாடுகளோடு, பொது நிலையில் எவ்வெத்தளங்களில் அல்லது களங்களில் ஒன்றுபட்டு ஒலிக்கின்றன என்பது சில தலைப்புகளாகச் சுட்டப்பட்டது. தொடர்ந்து, மனித உடலின் தோற்றம், உலகத் தோற்றம், இறைவனைக் குருவாகக் காணும் நெறி, பொய்க் குருக்களின் தன்மைகளும் கேடுகளும், மெய்க் குருக்களின் மேன்மைகளும் நன்மைகளும் முதலிய உட்தலைப்புகளில் இருவகைப் பேரிலக்கியங்களிலிருந்தும் பல அகச் சான்றுகள் எடுத்துக்காட்டப்பட்டு, அவற்றின் ஒற்றுமைப் போக்கு நிறுவப்பட்டது.*

*இனி, இத்தொடரில் நேரடியாகக் கடவுள் என்பவர் அல்லது கடவுள் என்பது யார் அல்லது எது? கடவுள் ஒருவரா, பலரா அல்லது பலராக, பலவாக வெளிப்படும் ஒருவரே, அவரை (அல்லது) அவர்களை (அல்லது) அவற்றை எப்படிக் கண்டு வழிபட வேண்டும் என்பன போன்ற இறையியல் வினாக்களுக்கு இவ்விருவகை இலக்கியங்களும் தரும் விடைகளை ஆய்ந்தறிய முற்படுவோம்.*

*இங்கு ஒன்று சொல்ல வேண்டும். ஏன் சித்தர் இலக்கியங்கள் என்றும், விவிலிய இலக்கியங்கள் என்றும் பன்மையில் குறிப்பிடுகிறோம் என்பதும் விளக்கற்பாலது. சித்தர்களிடையே அவர்தம் கொள்கைகளில் பல ஒற்றுமைகள் இருப்பினும், தனித்தனிச் சித்தர்கள் தம் கொள்கை கோட்பாடுகளில்*

வேறுபட்டு நிற்கும் இடங்களும் உள. அதனாற்றான், சித்தர்களைக் கொள்கை நிலையில், காய சித்தர்கள், ஞான சித்தர்கள், சன்மார்க்க சித்தர்கள், யோக சித்தர்கள் என்றெல்லாம் வகைப்படுத்துகிறோம். அதேபோல், கிறித்தவ விவிலியம் ஒரே தொடர்ச்சியான ஒற்றை நூல் அன்று. வரலாற்று நூல்கள், திருவெளிப்பாட்டு நூல்கள் (தீர்க்கதரிசனம்), இலக்கிய நூல்கள், பயண நூல்கள், காட்சி இலக்கிய நூல்கள் எனப் பலவகைமைகளை உடைய 66 நூல்களின் தொகுதியாகும். (இந்த 66க்கு மேல் வேறு சில இணைத்திருமறை நூல்களைச் சேர்த்துக் கொள்ளும் பிரிவினரும் உளர்). ஆகவே, இவை இலக்கியங்கள் எனப்படல் பொருந்துவதே. எனினும் விவிலிய நூல்கள் அனைத்தும், சித்தர் இலக்கியங்களைப் போலன்றி, மூலக்கோட்பாட்டில் ஒன்றுபட்டு ஓரிறைக் கோட்பாட்டை உணர்த்துபவை என்பதும் கருதப்பட வேண்டிய செய்தியாகும். ஆதலின், இவை 'இலக்கியங்கள்'' எனக் குறிக்கப்படுவது பொருந்துவதே.

**விவிலியம் பேசும் ஓரிறைக் கோட்பாட்டின் அடிப்படை விளக்கங்கள்:**

ஓரிறைக் கோட்பாட்டை வலியுறுத்தும் உலகப் பெருஞ் சமயங்களுள் கிறித்தவமும் ஒன்று. பழைய ஏற்பாட்டில் இறைவனால் தரப்பட்டுள்ள பத்துக் கட்டளைகளில் முதற் கட்டளை, 'இறைவன் ஒருவரே. அவரையன்றி வேறு எதனையும் எவரையும் எவ்வகை வடிவிலும் வணங்குதலும் வழிபடுதலும் கூடாது'' என்பதாகும். (யாத்திராகமம் 20:3-5) பழைய ஏற்பாட்டு நூல் முழுவதிலும் யூதர்கட்கு இக்கட்டளை மிக வலியுறுத்திப் பலராலும் பலவகையிலும் பேசப்படுவதைக் காணலாம். உயிரும், உணர்வுமற்ற விக்கிரகங்களை வணங்குதல் பேதைமை என்றும் பாவம் என்றும் அவ்வாறு 'ஏகோவா'' இறைவனை விடுத்துப் பிற தெய்வங்களை வணங்குவோர் வேதனையுறுவர் எனவும் 'சங்கீதம்'' எனும் திருப்பாடல் நூலில் பல இடங்களில் வலியுறுத்தப்படுகிறது. (சங்கீதம் 115:4-8, 16:4, 5) பழைய ஏற்பாட்டில் அமைந்த வரலாற்று நூல்கள் பலவும், ஒன்றான இறைவனாகிய 'ஏகோவா''வை மறந்து பிற தெய்வங்களை வணங்கிய மன்னர்களும், மக்களும் அப் பாவத்தினால் இறைவனின் சினத்துக்கு இலக்காகி பெருந் தோல்வியும் பேரழிவும் பெருந் துயரும் அடைந்த பல நிகழ்ச்சிகளை விவரிக்கின்றன (I & II இராஜாக்கள், I & II நாளாகமம்).

'ஏகோவா'' இறைவனின் அடியவரான எலியாத் தீர்க்கதரிசிக்கும் 'பாகால்'' எனும் அந்நிய தெய்வத்தைப் பின்பற்றும் நானூறு தீர்க்கதரிசிகளுக்கும் இடையில் நிகழ்ந்த சம்வாதத்தையும் அதன் இறுதி விளைவையும் 'இராஜாக்கள்'' நூலின் முதற் பிரிவில் காணலாம் (I இராஜாக்கள் 18:18-39).

இவ்வாறு, பழைய ஏற்பாடு வலியுறுத்தும் 'ஓரிறைக் கோட்பாடு'' யூத சமயத்தின் பின் வளர்ச்சியான கிறித்தவ சமயத்துக்கும் அடிப்படை அறமாக

அமைந்துள்ளது. இதனாற்றான் பாலை நிலத்தில் தம்மைச் சோதனைக்குட்படுத்த வந்த சாத்தானிடம் இயேசு பெருமான் 'உன் கடவுளாகிய ஆண்டவரை வணங்கி அவரை மட்டுமே ஆராதிப்பாயாக என மறை நூலில் எழுதியிருக்கின்றதே" எனப் பழைய ஏற்பாட்டு வாக்கியத்தை மேற்கோள் காட்டி பதிலளிக்கிறார். (மத்தேயு 4:10) புதிய ஏற்பாட்டின் முக்கிய எழுத்தாளரான புனித பவுலடிகளாரும் இதனைத் தம் திருமுகங்கள் பலவற்றிலும் ஐயத்துக்கிடமின்றித் தெளிவுபடுத்துகின்றார். கிறித்தவச் சமயத்தின் மைய நம்பிக்கைகளைத் தொகுத்தும் செறித்தும் வெளிப்படுத்தக் கூடிய அவரது வாக்கியங்கள் சில பின்வருமாறு:

'கடவுள் ஒருவரே. கடவுளையும் மனிதரையும் இணைப்பவரும் ஒருவரே. இவர் அனைவரின் மீட்புக்கு ஈடாகத் தம்மையே கையளித்தார்' (I தீமோத்தேயு 2:5, 6)

'உலகத்தில் தெய்வத்தின் சிலையென்பது ஒன்றுமே இல்லை. ஒரே கடவுளைத் தவிர வேறில்லை.'

இது நமக்குத் தெரிந்ததே. கடவுளர் எனக் கருதப்படுவோர் வானத்திலும் வையத்திலும் பலர் இருக்கலாம். இத்தகைய கடவுளர் பலரும் ஆண்டவர்கள் பலரும் இருந்தே வருகிறார்கள். நமக்கோ கடவுள் ஒருவர் அவர் பரம தந்தை. அவரிடம் இருந்தே எல்லாம் வந்தன. அவருக்காகவே நாம் இருக்கிறோம். ஆண்டவரும் ஒருவர்தான். அவரே இயேசு கிறிஸ்து" (I கொரிந்தியர் 8:4-6).



இவ்வாறு பல தெய்வ வணக்கத்தை வன்மையாக மறுத்து, இயேசு கிறித்துவின் வழியாக வெளிப்பட்ட ஒரே இறைவனை வணங்குதலை விவிலியம் வலியுறுத்தி விதிக்கின்றது.

ஓரிறைக் கோட்பாட்டைக் கிறித்தவம் வலியுறுத்திப் பேசுவது தொடர்பாக, ஒரு கூடுதல் விளக்கத்தையும் நாம் தர வேண்டியுள்ளது. குறிப்பாக, விவிலிய ஆழ்பொருள் உணராத பிற சமயத்தவர்களுக்கு இவ்விளக்கம்

*பெரிதும் தேவைப்படும். கிறித்தவம் பேசும் ஓரிறைத் தத்துவம்; இஸ்லாம் பேசும் ஏக இறைக் கோட்பாட்டோடு நேரடி ஒப்புமை உடையது அன்று. ஏனெனில், ஒன்றான இறைவன் (ஒன்றான மெய்த்தேவன் யோவான் 17:3) அருவ நிலையில் தொடக்கம் முதல் என்றென்றும் 'தந்தை" (ஏகோவா - யாவே) நிலையிலும், மனித உரு கொண்ட நிலையில் - உருவக் கடவுளாக 'மகன்' (ஒரே பேறான குமாரன் - இயேசு கிறிஸ்து) என்ற நிலையிலும் எப்போதும் அருவமாகவும் (சிலபோது உருவமாகவும் அதாவது காற்று - புறா, நெருப்புத்தழல் போன்ற வடிவங்களில்) ஆக அருவுருவமாகவும் திகழும் - தூய ஆவி' என்ற நிலையிலும், மூவொருவராக - மூ வொருமைத் தத்துவத்தில் (திரித்துவம்) வெளிப்படுகிறார் என்பது விவிலியக் கோட்பாட்டின் நுண்பொருள். ஆனால், மூன்று நிலைகளில் வெளிப்படும் கடவுள் ஒருவரே என்பதை விவிலியம் பல இடங்களில், பல முறைகளில் குறிப்பாக (I யோவான் 5:7), 8 வசனங்களில் தெளிவுறுத்துகிறது. 'பரலோகத்திலே சாட்சியிடுகிறவர்கள் மூவர். பிதா, வார்த்தை, பரிசுத்த ஆவி என்பவர்களே. இம்மூவரும் ஒன்றாயிருக்கிறார்கள்' என்பது அவ்வாக்கியம். அதே நேரம், தந்தை, மைந்தன், தூய ஆவி எனப்படும் இம்மூவொரு கடவுளர், இன்றைய இந்து சமயம் பேசும் சிவன், பிரம்மா, விட்டுணு ஆகிய 'திரிமூர்த்தி"களோடு எவ்வகையிலும் ஒப்புடையவர் அல்லர்.*

*இதைத்தான் 'அகத்தியர் ஞானம் 30" என்ற நூலில் சித்தர்,*

*'முச்சுடரும் ஒன்றாம் மும்மூர்த்தியல்ல<br>
மூவருமே ஆளுருவம் ஒன்றேயாகும்<br>
அச்சுதா இவர்களுமே ஆண் பெண்ணல்ல<br>
அரனுமல்ல லிங்கமல்ல அநாதியான<br>
சச்சிதானந்தனையே வணக்கம் செய்து<br>
சற்குருவைத் தரிசித்து சரணம் பற்றி<br>
எச்சரிக்கை கொண்டு நட அப்பா அப்பா<br>
எண்ணிலா முக்தி வழி எய்து வாயே"*

*என்று மிக அழகாகப் பாடியுள்ளார்.*

*'இறைவன் ஒருவரே", 'ஏகோவா", 'யாவே" என்றெல்லாம் யூதர்களால் அழைக்கப்பட்ட இறைவனையே அன்றி, பிற தெய்வங்களை எவ்வகையிலும், எவ்வடிவிலும் வணங்குதல் கூடாது என்ற கண்டிப்பான கட்டளைகள் விதிக்கப்பட்டதால், விவிலியம் பல தெய்வ, சிறு தெய்வங்களை வணங்குதலும் அவற்றுக்கு மனித அல்லது பிற வடிவங்கள் சமைத்து வணங்குதலும் விலக்கப்பட வேண்டியன எனக் கூறுவது சொல்லாமலே போதரும். இவை பற்றியெல்லாம் சித்தர் இலக்கியங்கள் கூறுவதற்கான*

*சான்றுகள் பின்னர் தரப்படுமெனினும், இக்கட்டுரையில் 'கடவுள் ஒருவரே. ஒன்றான தெய்வத்தையே வணங்க வேண்டும்' என்ற விவிலியக் கோட்பாட்டுக்கு அரண் சேர்க்கும் சித்தர் பாடல்களை மட்டும் இக்கட்டுரையில் காண்போம். இனி, வரிசையாக ஆறு சித்தர்கள் முழங்கும் 'ஓரிறைக் கோட்பாட்டு'' முழக்கங்களைக் காண முற்படுவோம்.*

***1) திருமூலர் பேசும் ஓரிறைத் தத்துவம்:***

*தமிழ்ச் சித்தர் இயக்கத்தின் பிதாமகராகப் போற்றப்படும் திருமூலரின் பின்வரும் பாடலை அறியாதார் தமிழ்நாட்டில் இலர். கடவுள் மறுப்பு பேசுவோராகக் கருதப்படும் திராவிட இயக்கத்தவர்கூட, இப்பாடலின் முதலடியைத் தம் கொள்கை முழக்கமாகக் குறிப்பிடுவதுண்டு.*

*'ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்*
*நன்றே நினைமின் நமனில்லை நாணாமே*
*சென்றே புகுங்கதியில்லை நும் சித்தத்து*
*நின்றே நிலைபெற நீர் நினைந் துய்யுமே'' (திருமந்திரம்)*

*இந்த ஓரிறைக் கோட்பாட்டையும் மனித சமத்துவத்தையும் அனைவரும் ஆழமாக நன்கு நினைக்க வேண்டும் என்றும், இதை விட்டால் நாம் நற்கதியடைய வேறு வழியில்லை என்றும் நம் சித்தத்தில் அதாவது புத்தியில் இது நிலைபெறும் வகையில் நாம் சிந்தித்தால் நாம் உய்வு பெறுவோம் என்றும் அவர் வலியுறுத்திக் கூறுவதைக் காண்கிறோம்.*

***2) கொங்கண சித்தரின் தெளிவான சிந்தனைப் பாடல்:***

*'கொங்கணர்' என்ற சித்தரின் பெயரால் சில சித்தர் பாடல் நூல்களில் காணப்படும் பின்வரும் பாடல், மிகத் தெளிவான சிந்தனைகளை உள்ளடக்கியதாக உள்ளது.*

*'கடவுளோன் ஒருவனுண்டே வேதம் ஒன்றே*

*காரண சற்குரு தீட்சை தானும் ஒன்றே*

*அடைவுடனே அவன் அருளும் பதவி ஒன்றே*

*அம்புவியின் மனுப்பிறவி ஆன தொன்றே*

*நடைவழியும் பல மனுவோர்க் கொன்றே*

*அல்லானால் வேதம் அறுசமய நடக்கை வேறாத்*

*திடமுடைய தேவர் பலர் உண்டென்போர்கள்*

தீநரகுக் காளாவார் திண்ணம் தானே’

வியப்பூட்டும் இப்பாடல், கடவுள் மட்டுமல்ல, இறைத் தத்துவம் தொடர்பான வேதம், குரு தீட்சை, முக்தி பதவி, மனிதப் பிறவி ஆகிய இவை அனைத்தும் அனைவர்க்கும் ஒன்றே எனவும், இதை மறுத்து பல தெய்வங்கள் உண்டென்போர் தீய நரகத்துக்கே ஆளாவர் எனவும் கடுமையாக எச்சரித்துப் பாடுகிறது.



***3)பட்டினத்தாரின் ஓரிறைக் கோட்பாட்டுச் செய்தி:***

கச்சி ஏகம்பன் முதலிய கடவுளரை விளித்துப் பாடிய பட்டினத்தார் இறைவன் ஒருவனே என்ற கோட்பாட்டையும் ஒரு பாடலில் இப்படிப் பாடுகிறார்.

‘ஒன்றென்றிரு தெய்வம் உண்டென்றிரு

உயர் செல்வமெல்லாம் அன்றிரு

பசித்தோர் முகம்பார் நல்லறமும் நட்பும் நன்றென்றிரு

நடுநீங்காமலே நமக்கு இட்டபடி என்றென்றிரு’

***4) சிவவாக்கியரின் ஓரிறைக் கோட்பாட்டுப் பாடல்கள்:***

*'அரியும் அரனும் ஒன்றென'' உணர வேண்டுமென வலியுறுத்திப் பாடும் சிவவாக்கியரின் இருபாடல்கள் ஓரிறைக் கோட்பாட்டையும் சமயப் பொதுமையையும் அழுத்தமாக விளக்குவனவாக அமைந்துள்ளன.*

*i)* *'எங்கள் தேவர் உங்கள் தேவர் என்றிரண்டு தேவரோ*

*அங்கு மிங்கும் ஆகிநின்ற ஆதிமூர்த்தி ஒன்றலோ*

*அங்கு மிங்கும் ஆகிநின்ற ஆதிமூர்த்தி ஒன்றெனில்*

*வங்க வாரம் சொன்ன பேர்கள் வாய்புழுத்து மாள்வரே'*

*'ஒரே கடவுள்'' என்பதை மறுத்து கடவுளைக் கூறுபோடுபவர்கள் வாய் புழுத்து மாள்வர் என்று கடுமையாகச் சாடுகிறார்.*

*ii)* *'எச்சமயத் தேவர்கட்கும் ஈசன் ஒருவன் அலால்*

*மெய்ச் சமயத் தெவர்க்கும் எங்கெங்கு வெவ்வேறு*

*தெய்வங்களா?'*

*எனத் தொடங்கும் பாடலில் பல்வேறு விலங்குகள் முதலியவற்றைத் தெய்வ விக்கிரகங்கள் ஆக்கும் முறைமையைச் சாடுகிறார். (இப்பாடல் பல பதிப்புகளில் காணப்படவில்லை).*

***5) குதம்பையாரின் ஓரிறைப்பாடல்:***

*குதம்பைச் சித்தரின் அழகிய இரட்டை அடிக் கண்ணிகள் தொடர் இவ்வாறு முடிகிறது.*

*'மெய்த்தேவன் ஒன்றென்று வேண்டாத பன்மதம்*

*பொய்த்தேவைப் போற்றும்படி - குதம்பாய்*

*பொய்த் தேவைப் போற்றும்படி'*

***6) அகத்திய சித்தரின் ஓரிறைக் கோட்பாட்டு அறிவுரை:***

*அண்மைக் காலத்தவராகவும் ஆவேசமாகப் பாடக் கூடியவராகவும் அவரது பாடல் நடையால் அறியப்பட்ட அகத்தியர் தமது ஞானப்பாடல்களை இரண்டை இப்படித் தொடங்குகிறார்.*

*i)* *'சத்தியே பராபரமே ஒன்றே தெய்வம்*
*சகலவுயிர் சீவனுக்கும் அதுதானாச்சு*

*புத்தியினால் அறிந்தவர்கள் புண்ணியோர்கள்*
*பூதலத்தில் கோடியிலே ஒருவருண்டு*
*பத்தியினால் மனமடங்கி நிலையில் நிற்பார்*
*பாழிலே மனத்தைவிடார் பரம ஞானி'*

*ii)* *'ஒருவனென்றே தெய்வத்தை வணங்க வேணும்*

*உத்தமனாய்ப் பூமிதனில் இருக்க வேணும்*

*பரு வமதிற் சேறுபயிர் செய்ய வேணும்*

*பாழிலே மனத்தை விடான் பரம ஞானி'*

*'கடவுள் ஒருவரே' என்று உணர்ந்து கொண்டவர்கள் பரம ஞானிகள் என்றும் அத்தகையோர் கோடியில் ஒருவர்தான் இருப்பர் என்றும் அவர் கூறுவது ஆழ்ந்து சிந்திக்கத்தக்கது.*

***சித்தர்களின் ஓரிறைக் கோட்பாட்டுப் பாடல்கள் - ஓர் ஐய வினா:***

*சித்தர்கள் பலரும் 'கடவுள் ஒருவரே' என்று ஒரு பக்கம் பாடினாலும், அவர்கள் (விக்கிரக) உருவ வணக்கத்துக்குரிய பல தெய்வங்களின் பெயர்களையும் (பட்டினத்தார், சிவவாக்கியர் போல) தம் பாடல்களில் குறிப்பதேன்? அவர்கள் பேசும் ஒரே கடவுள் யார் என்பன போன்ற வினாக்களுக்குப் பலரும், பல நிலைகளில், பல வகைகளில் விடையிறுக்கலாம். பொதுவாக, நாம் சொல்லக்கூடிய கருத்து யாதெனில், எந்தப் புரட்சிச் சிந்தனையாளனும் தனது அதி தீவிரப் புரட்சிச் சிந்தனைகளை அப்படியே மக்கள் மேல் ஒரே வீச்சில் சுமத்திவிட முடியாது. அவர்கள் அப்போது இருக்கும் நடப்பு நிலையை உள்வாங்கி, அதிலிருந்து மெல்ல மெல்லவே அவர்களை உயர் நிலைக்கு ஏற்றிட முடியும். அவ்வகையில்தான், சித்தர்கள் பல தெய்வங்களை வணங்கியும் உருவ வழிபாட்டில் மூழ்கியும் கிடக்கும் மக்களைச் சில நேரம் மென்மையாகவும் சில நேரம் வன்மையாகவும் தம் பாடல்களால் அவர்களை 'கடவுள் ஒருவரே, உருவ வணக்கம் கேடானதும் பொய்மையானதும் சமய உலகின் வஞ்சகர்களுக்கு வாய்ப்பளிப்பதுமானது' என்ற உயர்நிலை உணர்வுக்கும் தெளிவுக்கும் அவர்களை ஏற்றிவிட, இழுத்துவர முயன்றிருக்கிறார்கள் என்று புரிந்து கொள்ளுதல் தெளிவுதரும்.*

*(ஆய்வு தொடரும்)*

# பெண் பூப்பின் புனித வழிபாடு நூல் திறனாய்வு




**முனைவர் ஆ. பாப்பா**

*தமிழ் உதவிப்பேராசிரியர்*
*டோக் பெருமாட்டி*
*கல்லூரி, மதுரை*



*நூல்: பெண் பூப்பின் புனித வழிபாடு (Vulva worship, Lilith, Kali, Ragini, Sashthi)- படங்களுடன்*

**ஆசிரியர்: முனைவர் திருமதி செ. இராஜேஸ்வரி**

*சந்திரோதயம் பதிப்பகம், மதுரை-18. போன் 7010997639*
*பக்கங்கள் 120*
*விலை ரூ 200*

*பெண் பூப்பின் புனித வழிபாடு துடியான தெய்வங்கள் லிலித் – காளி – இடாகினி, பெண் பூப்பின் சமய வரலாறு, செந்தாமரை – ஆவுடை வழிபாடு, ஷஷ்தி – வட இந்தியாவின் கருக்காத்தம்மன் என்கிற நான்கு நிலைகளில் வளமைக்குரியவளாக இருந்து தெய்வ நிலைக்கு உயர்ந்து பின் அடிமை நிலைக்குத் தள்ளப்பட்ட பெண் கருத்தியல் பற்றிய நூலாக இது அமைந்துள்ளது.*

*நல் ஆற்றலுடைய தெய்வமாகப் பெண் வழிபடப்பட்டுப் பின் ஆணாதிக்கச் சிந்தனையால் தீய ஆற்றல் கொண்ட தீமை செய்யும் பேயாக மாறிப்போனாள். ஆற்றலற்றவள் என்கிற கருத்தியலாக்கத்திற்கு நிறைய புராணக் கதைகள் தேவைப்பட்டன. சமயங்களும் தமது பங்கிற்குப் பெண் தீட்டுக்குரியவள், ஒதுக்கப்பட வேண்டியவள் என்கிற கருத்துகளை முன்வைத்தன. இந்நிலை எப்போது, ஏன் தோன்றியது? உலக அளவிலும் இப்புனிதமும் வழிபாடும் மாற்றம் பெற்றதற்கான பின்னணியை உலகளவில்,*



*நூலாசிரியர்*
*முனைவர் திருமதி செ. இராஜேஸ்வரி*

*புராணங்கள்வழி, சமயங்கள்வழி, நாட்டுப்புற வழக்காறுகளின்வழி என்று பல்வேறு தளங்களில் விளக்க முற்படுகிறது இந்நூல்.*

*முதல் இயல் ஆற்றல் மிகு தெய்வங்களான லிலித் – காளி – இடாகினி பற்றிப் பேசுகிறது. இன்றைய பெண்ணியவாதிகளால் தீவிரவாதப் பெண்ணியத்தின் அடையாளமாக, முன்னோடியாக லிலித் அமைகிறாள். காளியும் ஆண்களை வெறுப்பவள், அவர்களுக்குக் கட்டுப்படாதவள், இடாகினியோ ஆரம்பக் காலத்தில் ஆற்றல் கொண்டவளாகவும் பின் பேயாகவும் கருதப்படுகிறவள். ஆனால் இன்று இம்மூவருமே ஆற்றல் குறைந்த சாத்வீக குணம் உடையவர்களாக ஆக்கப் பட்டிருக்கிறார்கள் என்பதைக் கூறுகிறது.*



*பழஞ்சமயத்தில் பெண், பூப்பு, அக்குருதி, குழந்தைப் பிறப்பு அனைத்துமே அச்சத்திற்குரியது, வழிபாட்டிற்குரியதாக இருந்தது. வேளாண் சமூகம் தோன்றியபிறகு அடிமைத்தனத்துடன் அனைத்தும் மதிப்பிழந்து போனதையும் அதற்குப் புராணக்கதைகள் காரணமாயிருப்பதையும் இரண்டாம் இயல் விளக்குகிறது. மூன்றாம் இயல் பிறப்புறுப்பு வழிபாடு குறித்துப் பேசுகிறது. உலக அளவிலும் இந்தியா, தமிழ்நாட்டிலும் சமய அடிப்படையிலும் இவ்வழிபாட்டின் தன்மை, மாற்றங்கள், இவை குறித்த புராணங்கள் பற்றி இவ்வியல் அலசுகிறது. இந்தியாவின் வடக்கிலும் தெற்கிலும் முறையே வழிபடப்படும் தேவசேனை மற்றும் கருக்காத்தம்மன் வழிபாடு பற்றி நான்காம் இயல் ஒப்பீட்டு நோக்கில் விளக்குகிறது.*

இன்றைய அறிவியல் உலகிலும் கூடச் சமயம், வழிபாடு, நம்பிக்கை என்று வருகிறபோது அறிவியல் பின் தள்ளப்பட்டு பழமை மாறாமல் நம்பிக்கைகளே முன்னிற்கின்றன. பொதுவெளியில் ஏற்றுக் கொள்ளப்படாவிட்டாலும் இதுதான் உண்மை. தெய்வம் (புனிதம்) – மருத்துவம் என்கிற தளங்களைக் கடந்து பெண்ணினம் அடிமை நிலையை அடைந்த வரலாற்றையும் காரணங்களையும் விளக்குவதை நோக்கமாகக் கொண்டுள்ள இந்நூல் மிகுந்த மேலாய்வுக் களங்களுக்குத் தொடக்கப்புள்ளி வைத்துக் கொடுத்திருக்கிறது.



1. மனிதகுலம் சப்த கன்னிகள் என்ற ஏழு மூதாய்கள் மூலமாக உருவானது.

2. கன்னிமார் வழிபாட்டை வேளாண் குடிமக்கள் சிறப்பாகச் செய்து வருகின்றனர்.

3. பெண் பூப்பு தொடர்பான வாய்மொழி வழக்காறுகளைச் சேகரித்தலும் ஆய்வு செய்தலும்.

4. வளமையும் பூப்பும் அறிவியலும் சோதிடமும்.

5. பெண் ஆற்றல் அன்றும் இன்றும் உருவகப்படுத்தல்.

6. லிலித் வழிபாடு.

செவ்வியல் இலக்கியங்கள் மட்டுமல்லாது இவ்வுலக வாழ்வியல் இயக்கமனைத்திற்கும் வாய்மொழி வழக்காறுகளே அடிப்படை என்பதை இந்நூல் இன்னும் வெளிச்சமிட்டுக் காட்டுகிறது. ஆடிப்பூரத்தன்று பெண் பூப்புத் தலைநாளாகக் கோவில்களில் கருதப்படுவதும் சிவனால் தூக்கி எறியப்பட்ட பார்வதியின் உறுப்புகளுள் பிறப்புறுப்பு விழுந்த இடமாகக் கருதப்படுகின்ற அஸ்ஸாம் காமக்யாவில் இன்றும் அவ்வழிபாடு நடைபெறுவதும் தெய்வம் பூப்படையும் நாள் என்று மூன்று நாட்கள் கோவில்

பூட்டப்படுவதும் என இவையனைத்தும் நாட்டுப்புற வழிபாட்டு வடிவங்களே. இவை ஒப்பீட்டாய்விற் குரியவை.

முருகப்பெருமானும் தெய்வானையும் வானத்தில் சென்று கொண்டிருக்கும் பொழுது தெய்வானை மாதவிலக்கானதால் தொடர்ந்து பயணம் செய்யமுடியாமல் மூன்று நாட்கள் தங்கிய இடமே மதுரையிலுள்ள திருப்பரங்குன்றம் மலை என்றொரு வாய்மொழிக்கதை வழக்கிலிருக்கிறது.

முதல் இயலின் தலைப்பான துடியான தெய்வங்கள் என்கிற சொல்லே வாய்மொழி இலக்கியக் கலைச்சொல்தான். அச்சம் என்பதை அடியாகக் கொண்டு துடியான என்ற சொல் தண்டிக்கத் தக்கது என்கிற பொருளில் வழங்கப்படுகிறது. இந்நூலின் கருத்துகள் பெரும்பான்மை ஆதிச் சமயக் கூறுகளை வெளிப்படுத்தும் விதமாக அமைந்திருப்பது சிறப்புக்குரியது.

வழிபாட்டையே வாழ்க்கையாகக் கொண்டிருக்கும் சிலருக்கு இந்நூல் கருத்துகள் சில கேள்விகளை எழுப்பலாம். ஆனால் அதன் பின்னணியில் இருக்கக்கூடிய சிந்தனைகளையும் சமூகத்தையும் அறிவியலையும் புரிந்து



கொள்ளவேண்டும். இந்நூல் பல கருத்துக்களை ஆரம்பக்கட்ட நிலையில் மட்டுமே விளக்கிச் செல்கிறது. தொடர்ச்சியான ஆய்வு நூல் வாசிப்புகள் வாசிப்போருக்கு நல்லதொரு தெளிவைக் கொடுக்கும் அல்லது இவ்வாசிரியரின் வேறு சில நூல்களான பெண் தெய்வ வழிபாடு, பண்பாட்டு நகர்வுகள், வேளாண் மரபில் விதைப்பும் பூப்பும் ஆகிய நூல்களை இந்நூலோடு இணைத்து வாசித்தால் முழுமையான புரிதல் கிடைக்கும் என்பது தெளிவு.

இறுதியாகச் சாதாரணமாக, சத்தமாக, அதிகமாக, வேகமாகப் பெண் பேசினாலே காளி போல் சண்டைக்கு வருபவள், அடங்காப் பிடாரி, அவளிடம் பேச முடியாது என்று பெண்ணினத்தை ஆண் சமூகம் தான் பேசுவது மட்டுமல்ல பெண்களையே பேச வைத்திருக்கும் மற்றும் பெண் – உடல் – உறுப்பு பற்றிப் பேசும் பெண்களைச் சமூகம் காம இச்சை மிகுந்தவள் என்று ஏசும், பேசுகின்ற இன்னும் தன்னைப் பற்றிப் பெண்ணே பேசத் தயங்கும் இன்றைய சமூகத்தில் இந்நூல் எழுதப்பட்டிருப்பது விழிப்புணர்வைத் தரும் என்றே நம்புகின்றேன்.

*தொடர் – 2*

# நான் குருதி பேசுகிறேன்

*- ராஜலட்சுமி சரவணன்*



*"நான் குருதி பேசுகிறேன்" என்ற தலைப்பின் தொடர்ச்சியாக இப்போது செந்நீரின் (குருதி) கூட்டமைவு பற்றி பார்ப்போம். முதலில் எனக்குள் அதிகமான அளவில் 55 சதவிகிதம் இருப்பது பிளாசுமா. இவன் என்னுள் கலந்த உற்ற தோழன் ஆவான். பிளாசுமா சிவப்பு மற்றும் வெள்ளையணுக்கள் இல்லாத வெண்மஞ்சள் நிறமுடைய புரதம், கனிம மற்றும் தாது உப்புகள், ஊட்டச் சத்துக்கள், கரிமக் கழிவுகள், நொதிகள் மற்றும் வாயுக்கள் நிறைந்த தெளிவான திரவம் ஆகும்.*

### பிளாசுமா புரதங்கள்:

*பிளாசுமாவில் 90 சதவிகிதம் தண்ணீர் மட்டுமே இருந்தாலும் சில கரை பொருட்களும் அடங்கியுள்ளன. இதில் பிளாசுமா புரதங்கள் ஏழு சதவிகிதம் உள்ளது. பிளாசுமா புரதங்கள் நுண் குழாய் துளைகள் (Capillary Pores) வழியாக திசுக்களுக்குள் நுழைய முடியாத அளவிற்குப் பெரிதாக இருப்பதால் குருதியாகிய என்னுள்ளேயே தேங்கிவிடும். இந்த பிளாசுமா புரதங்கள் தான் சவ்வூடுபரவல் அழுத்தத்தை (Osmotic Pressure) உருவாக்கி பிளாசுமா திரவத்தை என்னுடைய (blood) சுற்றோட்டத்தினுள் வைத்துக்கொள்ளக் காரணமாக அமைகிறது.*

*பிளாசுமா புரதத்தின் உற்பத்தி குறைவதால் அல்லது குருதிக் குழல்கள் வழியாக ஏற்படும் இழப்பு காரணமாக இதன் தேவையான அளவு இல்லாமல் போகும். இதனால் சவ்வூடு பரவல் அழுத்தமும் குறைகிறது. மேலும் திரவம் திசுக்களுக்குள்ளும் உடலில் உள்ள மற்ற துவாரங்களுக்குள்ளும் நுழைவதால் உடலில் நீர் வீக்கம் (oedema) உண்டாகும்.*

### பிளாசுமா புரதம் - வெண் புரதம் அல்லது கருப்புரதம் (Albumins) :

*பிளாசுமா புரதத்தில் உள்ள இந்த வெண் புரதம் கல்லீரலில் உருவாகிறது. இவை என்னுள் (குருதி) மிகுதியான அளவில் காணப்படும் பிளாசுமா புரதம் ஆகும். இதனுடைய முக்கிய வேலை எனக்குள் இருக்கும் அணுக்களை ஏந்திச்செல்லும் நிறமற்ற திரவத்தின் சவ்வூடு பரவல் அழுத்தத்தை இயல்பான அளவில் பராமரித்துக் கொள்வதாகும். மேலும் இந்த கருப்புரதம், சில*

மூலக்கூறுகளால் ஆன கொழுப்பு அமிலங்கள் மற்றும் பருவக இயக்குநீர் ஆகியவற்றை ஓரிடத்திலிருந்து மற்றொரு இடத்திற்கு எடுத்துச்செல்லும் கடத்தியாகவும் செயல்பட்டு வருகிறது.




***பிளாசுமா புரதம் - குருதிப் புரதமணி (*Globulins):**

*என்னுள் 55 சதவிகித அளவாக அமைந்திருக்கும் பிளாசுமா புரதத்தில் இந்தக் குமிழ் வடிவப் புரத மணியும் ஒன்றாகும். அதிகப்படியான புரதமணிகள் கல்லீரலிலும் மீதமுள்ளவை நிணநீர் திசுக்களிலும் (Lymphoid Tissue) உருவாகின்ற இதன் முக்கியமான பணிகள் வெளியிலிருந்து ஏதேனும் நச்சுப் பொருட்கள் உள்ளே வந்தால் அதைக் கொல்வதற்குரிய பிறபொருள் எதிரியாகிய (antibody-Immunoglobulins) ஏமப்புரத மணியாகச் செயல்படும். இவற்றில் வகைகள் உண்டு. மேலும், இவை நிணநீர் அணுக்களால் (Lymphocytes) உருவாக்கப்படுகிறது. நோய் எதிர்ப்பு சக்தியாக (Immunity) முக்கிய பங்கு வகுக்கிறது. இந்த நோய் எதிர்ப்புப் புரதம் வெளியிலிருந்து வரும் நோய்க் கிருமிகளை அழிக்கிறது. உடலுக்குத் தேவையான அனைத்து பாகங்களையும் தூண்டி செயல்பட வைக்கக்கூடிய ஊக்கிகளையும் (Hormones), உடலுக்குத் தேவையான தாது உப்புகளையும் (Mineral salts) என்னுடன் சேர்ந்து அனைத்து திசுக்களுக்கும் கொண்டு சேர்ப்பது இந்தப் புரத மணி. எடுத்துக்காட்டாக தைரோ புரத மணி கேடயச் சுரப்பி (thyroglobulin) தைராக்ஸின் என்ற ஊக்கியையும் இரும்புச்சத்தைக் கடத்தும் புரதமாகிய ட்ரான்ஸ்பரின் கனிம இரும்புச் சத்தையும் உடல் முழுவதும் எடுத்துச் செல்கிறது.*

*நாம் உண்ணும் உணவில் உள்ள புரதங்களைச் செரிமானம் செய்யக்கூடிய கணைய சுரப்பி நீரின் கருநிலை நொதிக் கூறு என்னும் டிரிப்ஸின் ட்ரிப்சினோஜன் என்ற வடிவில் கணையத்தில் இருந்து சுரக்கப்பட்டு சிறு குடலுக்குள் ட்ரிப்சின் ஆக மாற்றமடைந்து காரத்தன்மை உடைய சூழலில் புரதத்தை உடைக்கிறது. சில நேரங்களில் ஆல்பா 2 பெரும் புரத மணி (Alpha 2 macroglobulin) டிரிப்சினின் செயல்பாட்டைத் தடுக்கிறது.*

**பிளாசுமா புரதம்-இரத்தம் உறைவதற்கான காரணிகள் (Clotting factors):**

*குருதி உறைவதற்கான காரணிகள் உருவாவதற்கு கல்லீரல் காரணமாக இருக்கிறது. கல்லீரல் உயிர்ச் சத்தான வைட்டமின் கே யை பயன்படுத்தி குருதி யுறைவிப்பி (prothrombin), உறைவியக்க ஊக்கி (Thromboplastin) இன்னும் சில காரணிகளை உற்பத்தி செய்கிறது. வைட்டமின் கே உண்ணும் உணவிலிருந்தும் மற்றும் மனித குடல் பகுதியில் உள்ள நல்ல பாக்டீரியாக்கள் மூலமாகவும் கிடைக்கிறது.*

*பிளாசுமாவில் உள்ள முக்கியமான காரணிகள் குருதி உறைவதற்குக் காரணமாக அமைந்துள்ளது. மனித உடலில் அடிபட்டு அதனால் உண்டாகும் இரத்தப் போக்கைக் கட்டுப்படுத்துவதற்கு இந்த உறைதல் பணி நடந்தாக வேண்டும். கல்லீரல் இருந்து சுரக்கப்படும் பைபிரிநோஜன் இதில் பெரும் பங்காற்றுகிறது. பிளாசுமாவின் பாகு போன்ற பிசுபிசுப்புத் தன்மைக்கு பிளாஸ்மா புரதங்கள் வெண்புரதமும் பைப்ரியோஜனும் தான் காரணம். இந்த அடர் தன்மையே உடலில் சில நோய்களுக்கு எவ்வளவு எதிர்வினை காட்டி இருக்கிறது என்பதை அறிய முடிகிறது.*

**பிளாசுமா-தாது உப்புகள் (Mineral Salts/Inorganic Salts):**

*பிளாசுமாவில் உள்ள கனிம உப்புகள் செல் உருவாக்கம், தசைகள் சுருங்கி விரியக் காரணமாகவும் நரம்பு உந்துதல்களின் பரிமாற்றம், சுரப்புகளின் உருவாக்கம், அமிலங்கள் மற்றும் காரங்களுக்கு இடையே சமநிலையைப் பராமரித்தல் உள்ளிட்ட பல்வேறு வகையான செயல்பாடுகளில் ஈடுபடுகின்றன.*

*குருதியாகிய நான் நலமுடன் இருக்கும் போது காரத்தன்மை உடையதாக இருப்பேன். அமிலத்தன்மையும் காரத்தன்மையும் என்னுள் கலந்திருக்கும் நீரகம் (Hydrogen) எண்ணிக்கையை (pH) பொறுத்து அளவிடப்படுகிறது. உடல் முழுவதும் அங்கும் இங்குமாக ஓடி நண்பர்களின் துணையோடு தொடர்ச்சியாக சிக்கலான வேலைகளைச் செய்தாலும் பொதுவாக 7.35 மற்றும் 7.45 இதற்குள்ளாக pH அளவு பராமரிக்கப்படுகிறது. இதற்காக*

என்னுடன் பயணிக்கும் என் நண்பர்களுக்கு நான் நிச்சயமாக நன்றி கூற வேண்டும்.

**பிளாசுமா- ஊட்டச்சத்துக்கள் (Nutrients):**

மனிதர்கள் உண்ணும் உணவானது உணவுக் குழாய் வழியாகச் சென்று செரிக்கப்பட்டு ஊட்டச் சத்துக்கள் உறிஞ்சப்படுகிறது. முக்கியமான ஊட்டச் சத்துக்கான சர்க்கரை, அமினோ அமிலங்கள், கொழுப்பு அமிலங்கள், புரதச் சத்துக்கள் மற்றும் வைட்டமின்கள் இவற்றுடன் தாது உப்புக்களும் சேர்ந்து உடலில் உள்ள செல்களுக்கு சக்தியும், தேவையான வெப்பமும், உடலில் வேறு ஏதேனும் மாற்றங்கள் ஏற்பட்டால் அதை சரி செய்யவும் மற்றும் மாற்றிக் கொள்ளவும் தேவையானவற்றை வழங்குகிறது. மேலும் குருதிக் கூறுகள் மற்றும் வளர்சிதை மாற்றத்திற்குத் தேவையான சுரப்புகளையும் இணைத்துச் செயல்படுவதற்குப் பயன்படுகிறது.




**பிளாசுமா-கரிம கழிவுப் பொருட்கள் (Organic Waste Products):**

யூரியா, கிரியேட்டினைன் (குருதியினுள் உள்ள ஒரு இரசாயனக் கழிவுப்பொருள்) மற்றும் யூரிக் அமிலம் இவை அனைத்தும் புரத வளர்சிதை மாற்றத்தினால் வெளியாகும் கழிவுப்பொருட்கள் ஆகும். இவை கல்லீரலில் உருவாகி குருதியின் மூலமாக சிறுநீரகங்களுக்குள் சென்று அவை இந்தக் கழிவுப் பொருட்களை வெளியேற்றுகின்றன. ஒவ்வொரு செல்களிலும் உள்ள கரியமில வாயு குருதியினுள் கலந்து நுரையீரல் வழியாக வெளியேறுகிறது.

***பிளாசுமா-இயக்குநீர் (*Hormones):**

*நாளமில்லா சுரப்பிகளால் சுரக்கப்பட்டு இயக்குநீர் சுரப்பிகளின் செல்களில் இருந்து தேவையான திசுக்களுக்கும் உள்ளுறுப்புகளுக்கும் மற்றும் பல இடங்களுக்கும் நேரடியாக என்னுள் கலந்திருக்கும் பிளாசுமா கொண்டு சென்று செல்களின் செயல்களைத் துரிதப்படுத்துகிறது. இவற்றைப் பற்றி விளக்கமாக பிறகு பார்க்கலாம்*

***பிளாசுமா-வாயுக்கள் (*Gases):**

*பிராணவாயு கரியமில வாயு மற்றும் ருசரகம் (Nitrogen) ஆகியவை பிளாசுமாவின் கரைசலில் உடல் முழுவதும் சுற்றி வருகின்றன. மேலும் பிராணவாயு மற்றும் கரியமில வாயு இரண்டும் இணைந்து குருதி செந்நிறமியுடன் (haemoglobin) குருதி சிவப்பணுக்களில் சுற்றிக் கொண்டிருக்கின்றன. பெரும்பாலும் பிராணவாயு குருதி செந்நிறமியுடன் இணைந்து செல்வதும் கரியமிலவாயு பை கார்பனேட் அயன்களாக பிளாசுமாவில் கரைகின்றன. வளிமண்டலத்தில் உள்ள ருசரகம் உடலுக்குள் புகுந்து பிளாசுமாவில் இருந்தாலும் அதற்கென்று உடலியல் செயல்பாடுகள் எதுவும் கிடையாது.*

*படைகுடி கூழ்அமைச்சு நட்பறண் ஆறும்*

*உடையான் அரசருள் ஏறு. (குறள் எண் 381)*

*இந்த ஆறு அங்கங்களையும் உடையவனே அரசர்களில் ஆண் சிங்கம் போன்றவன் ஆவான் என்பது இக்குறளின் பொருள். அதுபோல குருதியின் பிளாசுமாவில் பிளாசுமா புரதங்கள், தாது உப்புக்கள், ஊட்டச் சத்துகள், கரிமக் கழிவுகள், இயக்குநீர் அல்லது ஹார்மோன்கள் மற்றும் வாயுக்கள் இவை ஆறில் ஏதேனும் ஒன்று இல்லையென்றாலும் உடல் இயக்கம் சரிவர நடைபெறாது. எடுத்துக்காட்டாக பிளாசுமா புரதம் இல்லையேல் உடலில் சவ்வூடுபரவல் அழுத்தம் குறைந்து நீர்க்கட்டிகள் உருவாகும். அதேபோல ஊட்டச்சத்துக் குறைபாடுகள் இருந்தால் உடலில் அனைத்தும் குறைபாடே. நாளமில்லா சுரப்பிகள் ஹார்மோன்கள் சுரப்பதை நிறுத்திவிட்டால் இரவு பகல் என்பது கூட தெரியாமல் மனிதன் மாண்டு போவான். வாயுக்கள் இல்லையேல் வேறு ஏது மனிதன் உயிர் வாழ.*

*அகம் புறம் அத்தனையும் சொல்லி வைத்த நம் ஆசான் வள்ளுவனை வணங்கி இந்தக் கட்டுரையை மீண்டும் தொடர்வோம்.*

# நக்கீரன் கண்ட பொருள் குற்றம்

**முனைவர் ஆனைவாரியார் ஆனந்தன்**
*சேத்தியாத்தோப்பு தமிழ் சங்க நிறுவனர் – தலைவர்*



*அன்றுதொட்டு இன்றுவரை நமக்குத் தெரிந்தவரையில் நக்கீரன் கண்ட பொருள் குற்றம் என்பது.... பெண்களின் கூந்தலுக்கு இயற்கை மணம் கிடையாது என்பது மட்டும்தான்!*

*ஆனால்.... இதற்காக மட்டும்தானா அந்தப் புலவன் தன் உயிரையும் கொடுத்து வாதாடி இருப்பான்? சற்று ஊன்றிப் பார்ப்போமானால் நெற்றிக் கண்ணையும் எதிர்த்து நின்றவனின் நெஞ்சத்தில் உள்ளூறைந்து வேறு ஏதோகூடக் கிடப்பதைப் போல் தோன்றுகிறதே!*

*ஆம்! அதுதான் தமிழ்க் கற்பு!*

*அன்றுமுதல் இன்றுவரை நிலைத்துநின்று, மேலை நாடுகளையெல்லாம் விஞ்சி நின்று, ஈடு இணையற்றதாய் உயர்ந்து நிற்கும் இமாலயத் தமிழப் பண்பாடல்லவா அவனது போராட்டத்தின் பின்னணியில் சிக்கிக் கிடந்திருக்கிறது.*

> *“மெல்லியல் மகளிர் நல்லடி வருட*
>
> *நரை விராவுற்ற நறுமென் கூந்தல்*
>
> *செம்முகச் செவிலியர்......”*

*என நெடுநல்வாடையில் தானே பாடிய நக்கீரன், வெறும் நறுமணக் கூந்தலுக்காகவா எதிர்த்துக் குரல் எழுப்பி இருப்பான்.*

*கொங்குதேர் வாழ்க்கைப் பாடலின் உயிர்... கூந்தலின் நறுமணம் மட்டுமே அல்ல. தமிழ்ப் பண்பாட்டின் உயிர்நாடியே அங்குத் தகர்க்கப்படுகிறது. அதனால்தான் சங்கப் புலவர்களில் யாருமே அந்தப் பொருள் குறித்துப் பாடல் எழுத முன் வரவில்லை. அதைக்கண்டு பொறாமல்தான் நக்கீரன் கொதித்து எழுந்திருக்கிறான். ஆனால் அதனை அவனால் வெளிப்படுத்திக் கொள்ளமுடியவில்லை.*

*அந்தப் பாடலில் தலைவன் தன் உயிர்த் தலைவியின் கூந்தலைப் பற்றி இன்னொரு நபரிடம் பேசுகிறான். யாரிடம்? உயர்ந்த ஜாதி வண்டான தும்பியிடம்!*

*அந்தத் தும்பி எப்படிப்பட்டது? பல்வேறு பூக்களில் சென்று, அமர்ந்து, அடைந்து, தேன் குடித்து, களித்து, உலவித் திரியும் இயல்புடைய கொங்குதேர் வாழ்க்கைத் தும்பி!*

*நாம் நமது கற்பனைப் பெருக்கை.... நுட்ப உணர்வு கலந்த கலைப் பார்வையைச் செலுத்திப் பார்ப்போமானால் தலைவியின் கூந்தலுக்கு இயற்கை மணம் உண்டுதான்! அவ்வாறெனில் அவளும் ஒரு பூதானே பல்வேறு பூக்களில் அடைந்து திரிந்து உலவும் பரத்தைமை வண்டு, தனக்கு உரிமையான பூவிலும் அமர்வதற்கு வண்டாக உள்ள தலைவனே அனுமதிக்கலாமா? அப்படி அனுமதித்தால் அவனது நிலை...?*



*தும்பி, அவளைத் தேடி வந்து, அவள் கூந்தலில் அமர்ந்து, உள்ளே புகுந்து துழாவி, கூந்தலில் நறுமணத்தை ஆராய எந்தத் தலைவன் மனம் ஒப்புவான் தமிழ்ப் பண்பாட்டின் அடிப்படையே தகர்க்கப்படும்போது, எந்தப் புலவனால் கற்பனையை ரசித்துக் கொண்டிருக்க முடியும்?*

*தான் நட்டுவைத்து.... வளர்த்த செடியையே தங்கையாகக் கருதும் இயல்புள்ளவளாயிற்றே சங்க காலத் தலைவி...! அப்படிப்பட்டவளிடம் பல பூக்களில் படுத்துப் புரண்டு பல்வேறு சுவைகளை உண்டு, பதம்பார்த்த வண்டு, தன்னைத் தேடி வந்து, தன் மீது அமர்ந்து, புரண்டு, நறுமண ஆய்வு நடத்துவதை அவள் ஏற்றுக்கொள்வாளா? அதற்குத் தலைவனே அனுமதிக்கலாமா?*

*இதுதான் கற்பனைப் பிரக்ஞையா? தமிழ் மண்ணின் கற்பனைப் பிரக்ஞையா இது?*

*நக்கீரன் வெளிப்படையாகச் சொல்ல விரும்பாது மனத்துக்குள் கொதித்தெழுந்த பொருள் குற்றம் இதுவாகத்தான் இருக்க முடியும்.*

*வெளிப்படையாக அவையில் கூறமுடியாமல்.... தமிழ்ப் பண்பாட்டைக் காப்பாற்றிய நெற்றிக்கண்ணுக்கும் அஞ்சாத நக்கீர நேர்மை இதுவல்லவா?*

*இதனாலன்றோ அகமும் புறமும் பூத்துச் சிரித்து தனிப்பெருமையுடன் குலுங்கி நிற்கிறது நமது தமிழ் மரபு!*

*மனிதரின் நுட்ப உணர்வை.. கற்பனை உணர்வை... கவிதைப் படைப்பை மதிப்பவன்தான் நக்கீரன்! அதேசமயம் கற்பனையில் மட்டுமே மூழ்கித் திளைத்துவிடாமல், மனிதப் பண்பையே நாசமாக்கும் தொற்றுநோய்ப் படைப்பை ஏற்க மறுத்து தமிழ் மரபைக் காப்பாற்றுவதையும் முக்கியமான பணியாகக் கொள்பவனும் நக்கீரன்தான்!*



*இதுதான் நக்கீர நேர்மை! இதனை அந்த நக்கீரனின் புறநானூற்று மொழியிலேயே குறிப்பிடுவது என்றால்... கற்பனையில் மட்டுமே மூழ்கித் திளைத்து...*

*"துய்ப்பேம் எனினே தப்புந பலவே!" (புறநானூறு-189)*

*நக்கீரன் கண்ட பொருள் குற்றத்தில் உள்ளுறைந்து எவ்வளவு பெரிய தமிழ்ப் பண்பாட்டுக் குழப்பம் பின்னிக் கிடந்துள்ளது என்பதை எல்லோரும் சிந்தித்து, நக்கீர நேர்மையைப் பாராட்டுவது நலம் பயக்கும்.*

# திருக்குறளும் மொழிபெயர்ப்பும்

## *(முனைவர் செ. இராஜேஸ்வரியின் மொழிபெயர்ப்பியல் நுண் ஆய்விருக்கை உரை)*



**முனைவர் சந்திரிகா சுப்ரமண்யன்**
*வழக்குரைஞர், எழுத்தாளர்,*
*சிட்னி தமிழ் வளர்ச்சி மன்றம், ஆஸ்திரேலியா.*

*தமிழ் இலக்கியங்களுள் மிகவும் அதிக மொழிபெயர்ப்புகள் கண்ட இலக்கியம் வள்ளுவர் வழங்கிய திருக்குறள் ஆகும். எக்காலத்திலும் பயன்தரும் திருக்குறள் கருத்துகள் தமிழரின் மெய்யியலை உலகுக்கு வழங்கியிருக்கிறது. அதனால்தான் உலக மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டபோது அதன் கருத்துகள் உலகில் பலருக்கும், எக்காலத்திலும் பயன்தரும் நெறிப்பட்ட கருத்துக்களாக இருப்பதால் அவை ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளன. குறிப்பாக, திருக்குறளின் பரந்துபட்ட பரவலுக்கு ஐரோப்பியர்களின் பங்களிப்புப் பெருந்துணையாக இருந்துள்ளது என்றால் மிகையாகாது. ஐரோப்பியர்கள் வெவ்வேறு மதங்களைச் சார்ந்தவர்களாக இருந்தாலும்கூட மதசார்பற்ற திருக்குறள் அவர்களை ஈர்த்ததில் ஆச்சரியப்படுவதற்கு ஒன்றுமில்லை.*

*திருக்குறள் முதன்முதலில் 1812ஆம் ஆண்டு அச்சடிக்கப்பட்ட நூலாக வெளியானது. அன்று முதல் இன்று வரை தொடர்ச்சியாக அச்சிடப்பட்டு வரும் ஒரு நூல் திருக்குறள். அத்துடன், உலகில் மதச்சார்பு கொண்ட பைபிளுக்கு அடுத்தபடியாக மதச்சார்பு ஏதுமில்லாத திருக்குறள் அதிகமாக மொழி பெயரக்கப்பட்ட நூல் என்பது பெருமைக்குரியது.*

*தமிழ் இலக்கியப் படைப்புகளில், இன்றைய கணக்கின்படி 46 மொழிகளில் 210 மொழிபெயர்ப்புகள் படைக்கப்பட்ட ஒன்றாகவும் விளங்குகிறது. செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவனம், 58 பழங்குடியின மொழிகள் உட்பட 102 மொழிகளில் திருக்குறள் மொழிபெயர்ப்புகளை உருவாக்கத் தொடங்கியுள்ளது.*

*திருக்குறள் மொழிபெயர்ப்புகளை மூன்றாக வகைப்படுத்தலாம். ஆங்கிலம் மற்றும் ஐரோப்பிய மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டவை, ஆசிய மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டவை, இந்திய மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டவை.*

*கடந்த 2022ஆம் ஆண்டின் இறுதி வரை 46 மொழிகளில், 210 மொழிபெயர்ப்புகள் திருக்குறளுக்கு வெளியாகியுள்ளன. செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவனம், 58 பழங்குடியின மொழிகள் உட்பட 102*

மொழிகளில் மொழிபெயர்க்கத் தொடங்கிவிட்டதாக அறிவித்துள்ளது. கொடுக்கப்பட்டுள்ள அட்டவணையில் ஒவ்வொரு மொழிக்கும் முதல் மொழிபெயர்ப்பு ஆண்டு, எத்தனை மொழிபெயர்ப்புகள் வெளியாகியுள்ளன என்ற தகவல்களையும் காணலாம்.

ஐரோப்பிய மொழிகளில்: ஆங்கிலம், பிரஞ்சு, ஜெர்மன், ரஷ்யன், இலத்தீன், போலிஷ், செக், டேனிஷ், டச்சு, ஃபின்னிஷ், இத்தாலியன், நார்வேஜியன், ஸ்வீடிஷ், போர்த்துகீசியம், ஸ்பானிஷ், ஹங்கேரியன், கிரேக்கம் ஆகிய பதினேழு மொழிகளில் திருக்குறள் மொழிபெயர்ப்புகள் வெளியாகியுள்ளன.

ஆசிய மொழிகளில்: அரபு, மலாய், சீன, ஃபிஜி, ஜப்பானிய, கொரியன், சிங்களம், பர்மிய , தாய், கரோ, இந்தோனேசிய, கம்போடிய ஆகிய பன்னிரெண்டு மொழிகளிலும் மொழிபெயர்ப்புகள் வெளியாகியுள்ளன.

இந்திய மொழிகளில்: மலையாளம், இந்தி, தெலுங்கு, சமஸ்கிருதம், கன்னடம், ஒரியா, வங்காளம், குஜராத்தி, உருது, கொங்கணி, மராத்தி, பஞ்சாபி, மணிப்பூரி, ராஜஸ்தானி, சௌராஷ்டிரா, வாக்ரி போலி, சந்தாலி ஆகிய 17 மொழிகளில் மொழி பெயர்ப்புகள் வெளியாகியுள்ளன. மலையாள மொழியில் திருக்குறள் முதலில் 1595 ஆம் ஆண்டு தொடங்கிப் பலரால் மொழி பெயர்க்கப்பட்டு எண்ணிக்கையில் அதிகமாக உள்ளது. ஏனைய இந்திய மொழிகளில் திருக்குறள் மொழிபெயர்ப்பு 19ஆம் நூற்றாண்டுக்குப் பின்னர்தான் வெளியாகத் தொடங்கின.

ஐரோப்பிய மொழிகளில் இலத்தீன் மொழியில்தான் முதலில் திருக்குறள் மொழிபெயர்க்கப்பட்டது. வீரமாமுனிவர் எனும் பெயர்கொண்ட கான்ஸ்டன்டைன் ஜோசப் பெஸ்கி (Constantine Joseph Beschi) இலத்தீன் மொழியில் 1730ஆம் ஆண்டு மொழிபெயர்த்தார். குறளின் அறம், பொருள் பிரிவுகளை மட்டும் மொழி பெயர்த்த வீரமாமுனிவர் காமத்துப்பால் பகுதியை, தான் மத போதகர் என்ற காரணத்தினால் மொழிபெயர்க்காமல் விட்டுவிட்டார்.

குறள் உரையின் முதல் மொழிபெயர்ப்புகள் 1803ஆம் ஆண்டு ஆகஸ்ட் ஃபிரெட்ரிக் கேம்மரர் (August Friedrich Caemmerer) மற்றும் 1847ஆம் ஆண்டில் ஃபிரெட்ரிக் ருகெர்ட்டால் (Friedrich Rückert )செய்யப்பட்டன.

ஆனால் இவை முழுமையடையாமல் இருந்தன. கேம்மரர் முதல் இரண்டு புத்தகங்களை மட்டுமே மொழிபெயர்த்தார். அஃதாவது, அறம் மற்றும் பொருள் ஆகிய இரண்டுமே மொழிபெயர்க்கப்பட்டன. முழுமையான ஜெர்மன் மொழிபெயர்ப்பு 1856இல் கார்ல் கிரால் (Karl Graul) என்பவரால் செய்யப்பட்டது. Der Kural des Tiruvalluver என்ற தலைப்பில் 220 பக்கங்களில் வெளியிட்டார். இந்த மொழிபெயர்ப்பு கமில் ஸ்வெலபில் உட்பட, பல்வேறு அறிஞர்களால் அறிவார்ந்த ஒன்றாகக் கருதப்படுகிறது. இம்மொழிபெயர்ப்பை, "எனக்குத் தெரிந்தவரை, திருக்குறளின் இரண்டு சிறந்த மொழிபெயர்ப்புகள்

*இதுநாள் வரை இருந்தன, கிராலின் பழைய ஜெர்மன் பதிப்பு மற்றும் வி.வி.எஸ். ஐயரின் (ஆங்கிலத்தில் மொழிபெயர்ப்பு)" என்று கமில் பாராட்டியுள்ளார். பத்தொன்பதாம் நூற்றாண்டில் ஆல்பிரெக்ட் ஃப்ரென்ஸ் மற்றும் கே. லலிதாம்பாள் ஆகியோரால் 1877ஆம் ஆண்டில் (Thirukural von Thiruvalluvar aus dem Tamil) என்ற தலைப்பில் மேலும் ஒரு மொழிபெயர்ப்பு உருவானது .*



*ஜெர்மன் அறிஞர் டாக்டர் கிரால் தமிழ் மொழியைக் கற்று திருக்குறளை மூலத்தில் படித்த பின்னர், 1854ஆம் ஆண்டு ஜெர்மன் மொழியில் மட்டுமல்லாது 1856இல் இலத்தீன் மொழியிலும் மொழிபெயர்த்தார்.*

*திருக்குறளின் கணிசமான பகுதியை மொழிபெயர்த்த டாக்டர் கிரால் தன் மொழி பெயர்ப்பு அனுபவத்தை “எந்த மொழி பெயர்ப்பும் மனங்கவரும் அதன் மாண்பினை முழுமையாக வெளிக்கொணர்ந்துவிட முடியாது. அஃது உண்மையில், வெள்ளி வேலைப்பாடு கொண்ட, தங்க ஆப்பிள் கனி” என்று சிறப்பித்துப் பேசினார்.*

*பிரெஞ்சு அறிஞர், எம்.ஏரியல், குறளின் சில பகுதிகளை 1848இல், பிரெஞ்சு மொழியில் மொழிபெயர்த்தார். 1730இல், பெயர் தெரியாத ஓர் ஆசிரியர் செய்த முந்தைய பிரெஞ்சு மொழிபெயர்ப்பு ஒன்றைப் பற்றியும் குறிப்பும் அவரது நூலில் உள்ளது.*

*ஜெர்மன், இலத்தின் மொழிகளை அடுத்து திருக்குறள் அதிகம் மொழி பெயர்க்கப்பட்டது. ஆங்கிலத்தில்தான். முதன் முதலில் நதானியேல் எட்வர்ட் கிண்டர்ஸ்லி (Nathaniel Edward Kindersley) என்பவரால் 1794இல் ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட்டது. தொடர்ந்து 69 முறை மொழிபெயர்க்கப்பட்டு*

இன்று ஆங்கிலத் திருக்குறள் மொழிபெயர்ப்பு 98 என்ற எண்ணிக்கையை எட்டிவிட்டது. நதானியேல் எட்வர்ட் கிண்டர்ஸ்லி ஒரு சில குறள்களை மட்டுமே மொழிபெயர்த்து, 'ஸ்பெசிமென்ஸ் ஆஃப் இந்து லிட்ரேச்சர்' (Specimens of Hindoo Literature) என்ற நூலில், 'எக்ஸ்ட்ராக்ட்ஸ் ஃப்ரம் தி திருவள்ளுவர் குறள்' (Extracts from the Teroo-Vaulaver Kuddul, or, The Ocean of Wisdom) என்ற தலைப்பில் ஓர் அத்தியாயத்தை இணைத்திருந்தார்.

அவரைத் தொடர்ந்து, பிரான்சிஸ் வைட் எல்லிஸ் (Francis Whyte Ellis), தனது 'திருக்குறள் ஆன் விர்ச்யூ வித் கமெண்ட்டரி' (Thirukural on Virtue (in verse) with Commentary)இல் 1812ஆம் ஆண்டு 120 குறள்களை மொழிபெயர்த்து வெளியிட்டார். வில்லியம் ஹென்றி ட்ரூ (William Henry Drew) 1840ஆம் ஆண்டில் முதல் 630 குறட்பாக்களை மொழிபெயர்த்து வெளியிட்டார். பின்னர், 1885ஆம் ஆண்டில் ஜான் லாசரஸ் (John Lazarus) இந்த நூலில் விடுபட்ட ஏனைய குறட்பாக்களை மொழிபெயர்த்ததுடன், வில்லியம் ஹென்றி ட்ரூ மொழிபெயர்த்தவற்றையும் மேம்படுத்தித் திருக்குறள் மொழிபெயர்ப்பை முழுமையாக்கினார். அதன் பின்னர், குறளின் முழுமையுறாத ஆங்கில மொழிபெயர்ப்புக்களை உதிரியாகச் சார்லஸ் கோவர் (Charles E. Gover) 1872ஆம் ஆண்டிலும், எட்வர்ட் ஜூவிட் ராபின்சன் (Edward Jewitt Robinson) 1873ஆம் ஆண்டிலும் மொழிபெயர்த்து ஆங்கிலத்தில் வெளியிட்டனர்.

முழுமையற்ற திருக்குறள் மொழிபெயர்ப்புகளுக்கு முழு வடிவம் கொடுக்கும் முயற்சியாக முழுமையாக ஜி.யு. போப் அவர்களால் 1886ஆம் ஆண்டில் திருக்குறள் 'எ கலெக்‌ஷன் ஆஃப் தி இங்லீஷ் டிரான்ஸ்லேஷன் ஆஃப் திருக்குறள்' (A Collection of the English Translation of Thirukural) எனும் தலைப்பில் நூலாக மொழிபெயர்க்கப்பட்டது. ஒரு தனி மொழிபெயர்ப்பாளராக ஜி.யு. போப் செய்த மொழிபெயர்ப்பு உலக அளவில் முழுத் திருக்குறளைக் கொண்டு சேர்த்தது.

டாக்டர் ஜி.யு.போப் திருக்குறளைப் பாராட்டி 'குறள் ஒரு சீர்மை உடையது. தெளிவாக உணர்ந்து அறியத்தக்கது. ஒருமைப்பாட்டினைக் கொண்டிருந்த ஒரு நாகரிகத்தைச் சித்தரித்துக் காட்டும் ஓர் ஒருங்கு இணைந்த ஓவியம்' என்று குறிப்பிடுகிறார்.

அவருக்குப் பின்னர் முப்பது ஆண்டுகள் கழித்துத்தான் இந்திய அறிஞர்கள் திருக்குறள் மீது கவனம் செலுத்தத் தொடங்கினர். திருக்குறள் முழுமையும் வ.வே.சு.ஐயர் அவர்களால் ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட்டது. அவரைத் தொடர்ந்து கே.எம்.பாலசுப்பிரமணியம், சுத்தானந்த பாரதியார், ஆ. சக்கரவர்த்தி, மு.சி.பூரணலிங்கம் பிள்ளை, சி.இராஜகோபாலாச்சாரி எனப் பலர் திருக்குறளை முழுமையாகவோ பகுதியளவோ மொழிபெயர்த்து வெளியிட்டனர். இப்படி இதுவரை திருக்குறளுக்கு 69 ஆங்கில

*மொழிபெயர்ப்புகள் வெளியாகியுள்ளன. இவற்றில் 37 மொழிபெயர்ப்புகள் முழுமையானவை.*

*இந்திய மொழிகள் பதினான்கிலும் ஏறக்குறைய 35 மொழிபெயர்ப்புகள்; ஆங்கிலத்தில் மட்டும் 97 மொழிபெயர்ப்புகள் என ஒட்டுமொத்தமாக, 169 மொழிபெயர்ப்புகள் உள்ளன.*



*ஆனால், திருக்குறள் மொழிபெயர்ப்பு நூல்கள் அனைத்தும் உரை விளக்கங்களாக மட்டுமே உள்ளனவே தவிர, கவிதை வடிவமாக அமைக்கப்படவில்லை. கவிதையைக் கவிதையாகவே மொழிபெயர்க்க வேண்டும்' என்பதுதான் அறிஞர் கருத்து. ஆனால், மூலமொழியைப் போலவே இலக்குமொழியில், சிறந்த புலமை வாய்த்திருந்தால் அன்றி அவ்வாறு கவிதையாக மொழிபெயர்க்க முடியாது என்பது உறுதி.*

*மூல நூலுக்கு இணையாகக் குறளின் கருத்தை மட்டுமே வெளிப்படுத்தி நிற்பவை. திருக்குறள் தனது கவிதைச் சிறப்பையும் கவர்ச்சியையும் மொழிபெயர்ப்பு முயற்சிகளின்போது தொலைத்துவிடுவதாக மொழிபெயர்ப்பாளர்களும் தமிழறிஞர்களும் கருதுகின்றனர்.*

*செவ்விலக்கியக் கவிதைகளை மொழிபெயர்க்கும்போது பல நிலைகளில் இடர்ப்பாடுகள் தவிர்க்க முடியாதன. குறிப்பாக மூலமொழிக் கவிதையின் ஒலியமைப்பே மொழிபெயர்ப்புக்குச் சவாலாக இருக்கிறது.*

*"துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத்*

*துப்பாய தூஉம் மழை" (12)*

*இக்குறளின் கவிதை வடிவம் அதன் பொருளுடன் எவ்வளவு இசைந்துள்ளது என்பதை மேம்போக்காகப் படித்தாலும் உணரமுடியும். அதனால்தான்*

*படைப்பின் வடிவத்தையும் பொருளையும் பிரிப்பது இயலாது என்றனர். வடிவச் சிறப்பே கவிதைச் சிறப்பு என்பது முற்றிலும் உண்மை.*

*கமில் சுவலபில், 'திருக்குறளை மொழிபெயர்க்கும் போது, அதன் கவிதைச் சிறப்பையும், பாடலின் கருத்துச் சிறப்பையும் மொழிபெயர்ப்பது பெரும் சவால் மிக்கது' என்று குறிப்பிடுகிறார். அத்துடன், "திருக்குறளின் தமிழ் மூலத்திற்கு இணையாக நடையழகிலோ சொல்வன்மையிலோ எந்த ஒரு மொழிபெயர்ப்பும் இருக்க இயலாது" என்றும் "திருக்குறள் கூறும் உண்மையான பொருளை எந்த ஒரு மொழிபெயர்ப்பைக் கொண்டும் அறிய முடியாது" என்றும் "குறளின் தமிழ் மூலத்தைப் படிப்பதன் வாயிலாக மட்டுமே வள்ளுவர் கூறிய ஆழ்பொருளை அறிய முடியும்" என்றும் மிகத் தெளிவாகக் கமில் சுவலபில் எடுத்துரைக்கின்றார்.*

*கமில் சுவலபில் சொல்லும் இக்கருத்தை உன்னிப்பாகக் கவனித்தால் மொழிபெயர்ப்பின் அடிப்படைகள் குறித்த புரிந்துணர்வின் தேவையினை மொழிபெயர்ப்பாளர்கள் உணர்ந்து செயல்பட வேண்டும் என்பது உறுதியாகிறது.*

*மொழிபெயர்ப்பு (Translation) என்பதற்கும் மொழியாக்கம் (Transcreation) என்பதற்கும் இடையிலான வேறுபாடுகள் பற்றிய புரிந்துணர்வு தேவை. மொழிபெயர்ப்பு என்பது ஒரு மொழியிலிருந்து இன்னொரு மொழிக்கு மாற்றுவது. மொழியாக்கம் என்பது மொழிபெயர்ப்பும் (translation and creation) படைப்பாற்றாலும் இணைந்தது எனப் பொருளாகும் . மொழியாக்கத்தில் ஒரு மொழியின் அர்த்தத்தின் அனைத்து அம்சங்களையும் கருத்தில் கொள்வதால், மொழிபெயர்ப்பைவிட மொழி மாற்றம் மிகவும் சிக்கலானது. மூலமொழியில் உள்ள கருத்துக்களையும் உணர்வுகளையும் மொழிபெயர்ப்பவர் நன்கு உள்வாங்கிப் புரிந்து கொள்வதால் மட்டுமே மொழிபெயர்ப்பு சிறப்பாக அமையும்.*

*மொழிபெயர்ப்பில் ஈடுபடும்போது, மொழிபெயர்க்கப்படும் மொழி எதுவாக இருந்தாலும் ஒரு மொழிக்கு இலக்கிய வழக்கு, உலக வழக்கு என்ற இரு பாகுபாடுகள் உள்ளன என்பதைக் கருத்தில் கொள்ள வேண்டும். மொழிபெயர்ப்புக்கென்று தனி மொழிநடையோ அல்லது மொழிபெயர்ப்புக்கென்று இலக்கண வரையறையோ எதுவுமோ இல்லை. மூல படைப்பில் கையாளப்படும் தெளிந்த மற்றும் ஆற்றொழுக்கான மொழி மரபு பிறழாத நடையினைப் பின்பற்றி எழுதப்பட்டு மூலப்படைப்பினை வாசிக்கும் அனுபவம் மொழிபெயர்ப்பினை வாசிக்கும் போதும் கிட்டினால் அதுவே மொழிபெயர்ப்புக்குக் கிடைக்கும் வெற்றியாகும்.*

*மொழிபெயர்ப்புக்கான நோக்கங்கள் நான்கு. அவை:*

*(1)* மொழிபெயர்க்கப்பட்ட நூல் மூல நூலின் மொழி தெரியாதவர்களுக்குப் பயன்பட வேண்டும்

*(2)* வேற்றுமொழி படைப்புகளைக் கற்க விரும்பும் ஆர்வலர்க்குப் பயன்பட வேண்டும்

*(3)* புலம் பெயர்தல் மற்றும் பல காரணங்கள் காரணமாகப் பிறமொழி ஆதிக்கச் சூழ்நிலையில் வாழ்வோர் தம் மொழியில் கற்பதற்குப் பயன்பட வேண்டும்

*(4)* மொழியறிவு குன்றிய காரணத்தால், அறிவூட்டலுக்குப் பயன்பட வேண்டும் என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும்.



மொழிபெயர்ப்பவருக்கு,

*1.* மூல மொழியில் ஆழ்ந்த அறிவும்

*2.* இலக்கு மொழியை நன்கு கையாளும் ஆற்றலும்

*3.* மொழிபெயர்க்கப்படும் இலக்கியம் தொடர்பான பொருள், பின் புலம், மரபு பற்றிய அறிவு ஆகியவை பற்றிய புலமையும் இருக்க வேண்டும் .

மூலமொழிக் கருத்துக்கு மிக நெருங்கிய இணையான இலக்கியத்தை மாற்று மொழியிலும் ஆக்கித் தரும் மொழிபெயர்ப்பே உயிரோட்டமுள்ள மொழிபெயர்ப்பாகக் கருதப்படும். இதில் பொருள் முதன்மையாகக் கவனிக்கப்பட வேண்டும், இரண்டாவதாக நடை முக்கியத்துவம் பெறும். இதற்குக் காரணம்,

*(1)* மொழிபெயர்ப்பில் முறைசார் நிகரனைக் காட்டிலும் ஆற்றல் மிகு நிகரனைப் பயன்படுத்துவது முக்கியமானது.

*(2)* சொல்லுக்குச் சொல் மொழிபெயர்ப்பைக் காட்டிலும் சூழல் சார்ந்த மொழிபெயர்ப்பு பொருத்தமானது.

*(3) மரபு சார்ந்த சொற்றொடர்களைவிடப் பழக்கமான சொற்கள் வாசகரை விரைவில் ஈர்க்கும்.*

*(4) ஒரு மொழியின் இலக்கியங்கள் பிரதிபலிக்கக்கூடிய மரபுகள், பழக்க வழக்கங்கள், சூழல்கள் போன்ற அடிப்படைகள் மொழிபெயர்க்கப்பட்ட பின்னும் வெளிப்படுத்தப்படுவதும் மிக அவசியமான ஒன்றாகும்.*

*மேலே கூறிய அடிப்படைகளின் பின்புலத்தில் மூலநூலின் கருத்துகளை மற்றொரு மொழிக்கு மாற்ற முன்வரும்போது மூலநூலின் கருத்துகளில் சிறிதும் மாறுபாடு ஏற்படாது இருத்தல் மிக அவசியமாகும். அவற்றுள் முரண்பாடு உருவாக்கினால் மொழிபெயர்ப்பின் நோக்கம் நிறைவேறாது. எனவேதான் மொழிபெயர்ப்பாளர் மூலநூலினை நன்கு புரிந்துகொண்டு மொழிபெயர்ப்பில் இறங்க வேண்டும் என்பது முக்கியமான விதியாகும்.*

*திருக்குறள் மொழி பெயர்ப்பு முயற்சியில் பல்வேறு மொழிபெயர்ப்பாளர்கள் ஒரு குறளை பல வகைகளில் அணுகியிருப்பதைத் திருக்குறள் மொழிபெயர்ப்புப் பிரதிகளில் காணலாம். இங்கு, ஒரு திருக்குறளை எடுத்துக் கொள்வோம்.*

*‘மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்தறன்*

*ஆகுல நீர பிற’*

*(1) "Let him who does virtuous deeds be of spotless mind to that extent is virtue*

*all else is vain show" (W.H. Drew & John Lazarus)*

*(2) "Spotless be thou in mind, this only merits virtue’s name; All else, mere pomp of idle sound, no real worth can claim" (Dr. G.U. Pope)*

*இவற்றுள் ஜி.யு.போப் அவர்களின் மொழிபெயர்ப்பு விளக்கமாகவும், பொருத்தமாகவும், சுருங்கக்கூறி விளங்க வைக்கும் விதத்திலும் அமைந்துள்ளது என்பது பலரது கருத்தாகும்.*

*திருக்குறளை ஆங்கிலத்திற்கு மொழிபெயர்க்கும்போது பல வித சிக்கல்கள் ஏற்படுவது தவிர்க்க இயலாததாகும்.*

*சான்று :*

*அகர முதல் எழுத்தெல்லாம் என்று தொடங்கும் முதல் குறள்*

*எழுத்து ‘அ ’ என்பது அகரமகிய முதல் எழுத்து. இதை மொழிபெயர்த்த அறிஞர் பெருமக்களின் அணுகுமுறை:*

*A as its first of letters, every speech maintains – ஜி.யூ.போப்*

*As all letters have the letter 'A' for their first* – ட்ரூ

*A leads letters* – யோகி சுத்தானந்த பாரதி

*A begins the Alphabet* - பி.எஸ்.சுந்தரம்

ஆனால், அரவிந்தர், *'Alpha of all letters the first'* - என்கிறார்.

அவரது செம்மொழிப் புலமை இதில் வெளிப்படுகின்றது.

ஆல்பா என்பது கிரேக்க எழுத்துக்களின் முதல் எழுத்து மட்டுமல்ல, எந்தவொரு வகைப்பாட்டின் தொடக்கமுமாகும்.

போப் "ஆதி தெய்வம்" என்றும், ட்ரூ "நித்திய கடவுள்" என்றும், சுத்தானந்த பாரதி "பண்டைய இறைவன்" என்றும் பி.எஸ்.சுந்தரம் "கடவுளே ஆதி" என்றும் பலவாறு சொல்கிறார்கள். ஆனால், அரவிந்தர் மட்டும் "அசல் கடவுள்" என்று கூறுகிறார்.

இந்த அணுகுமுறைகள் வேறுபடுவதற்குக் காரணம் மொழிபெயர்ப்பில் ஏற்படும் சிக்கல்கள் ஆகும். அப்படி மொழிபெயர்க்கும்போது ஏற்படும் சிக்கல்களைப், பின்வருமாறு வகைப்படுத்தலாம்:

1. தொடரியல் - வாக்கியச் சிக்கல்கள் *(Syntactic Problems)*

2. நடையியற் சிக்கல்கள் *(Stylistic Problems)*

3. கலாச்சாரச் சிக்கல்கள் *(Cultural Problems)*

4. சொற்பொருள் சிக்கல்கள் *(Semantic Problems)*

5 இலக்கிய மரபு சார்ந்த சிக்கல்கள்

வாக்கியச் சிக்கல்கள்

வாக்கியச் சிக்கல்களில் குறிப்பாக வேற்றுமை உருபுகள் ('ஐ', 'ஆல்', 'கு', 'இன்', 'அது', 'கண்', 'விளி') குறித்த சிக்கல்கள் குறிப்பிடத்தக்கவை. சில இடங்களில் வேற்றுமை உருபுகள் மறைந்தும் சிலசமயங்களில் அவற்றின் பொருள் மாறியும் காணப்படுகின்றன. ஏ, உம் போன்ற இடைச் சொற்களும் பலசமயங்களில் மறைந்துவருகின்றன. உருபன்களை மொழிபெயர்க்கும்போது இச்சிக்கல்கள் உருவாகின்றன.

"குணமென்னும் குன்றேறி நின்றார் வெகுளி
கணமேனும் காத்தல் அரிது" (29)

இந்தத் திருக்குறளில், வேற்றுமை உருபுகள் மறைந்து வருகின்றன. அதனால் பொருள் இரு விதமாகப் புரிந்து கொள்ளப்படுகிறது. "குண மென்னும் குன்றேறி நின்றார் (உடைய) வெகுளியைப் (பிறர்) கண மேனும் காத்தல் அரிது"

என்று பொருள் கொள்ள வேண்டுமா, அல்லது "குணமென்னும் குன்றேறி நின்றார், பிறர் வெகுளி(யை) ஒரு கணமும் காத்தல் அரிது" என்பதா? என்ற குழப்பம் உருவாகின்றது.

இந்தக் குறளில் குன்றேறி நின்றாரின் வெகுளியை மற்றவர் காத்தல் அரிதா? குன்றேறி நின்றாருக்கு வெகுளியைக் கணமேனும் காத்தல் அரிதா? வேற்றுமை உருபுகள் வெளிப்படையாக இல்லை என்ற காரணத்தால் மொழிபெயர்ப்பில் சிக்கல் உருவாக்கின்றது.

குறிப்பாகக் கவித்துவமான வரிகள்கூட அவற்றின் அழகுணர்ச்சியையும் மீறி பொருள் குழப்பத்தைத் தோற்றிவிடக் கூடும்.



"மக்கள் மெய்தீண்டல் உடற்கின்பம்" என்ற குறளில் குழந்தைகளுடைய மெய்யைத் தீண்டுதல் தீண்டுபவர் உடலுக்கு இன்பமா, அல்லது குழந்தைகளுடைய உடலுக்கு இன்பமா, அல்லது இரண்டுமா? என்ற குழப்பம் உருவாகும். ஏதாவது ஓர் அர்த்தத்தை மட்டுமே மொழிபெயர்ப்பில் கொண்டுவர முடியும் என்பதே மொழிபெயர்ப்பின் அடிப்படைச் சிக்கலாகிறது.

**இலக்கிய மரபு சார்ந்த சிக்கல்கள்**

கவிதைகளில் ஒரே சொல்லுக்காக வெவ்வேறு இலக்கண அமைப்பின்படி எழுதப்படும்போது, மொழிபெயர்ப்பில் சிக்கல்கள் தோன்றுவதும் இயல்பு.

பயனில் சொல் பாராட்டுவானை மகன் எனல்,
மக்கட் பதடி எனல். (196)

இதில் 'எனல்' என்பது இரு பொருளைக் காட்டுவதாகும். ஒன்றில் உடன்பாட்டுப் பொருளையும், இன்னொன்றில் எதிர்மறைப் பொருளையும் கொண்டிருக்கிறது.

*வாக்கியச் சிக்கல்கள் என்பதில், மொழிபெயர்க்கப்படும் ஒரு மூல நூலில் சில சொற்கள் மறைந்தும் வரலாம் அல்லது விடுபட்டிருக்கலாம் அல்லது அதில் பொருள் மயக்கமோ, பொருள் மறைந்தும் காணப்படலாம் அல்லது வெவ்வேறு சூழல்களில் பொருத்துவதால் வெவ்வேறு அர்த்தங்கள் அதில் தோன்றலாம்.*

*சொற்கள் அல்லது தொடர்கள் விடுபட்டோ மறைந்தோ (ellipsis) வருவதாலும் மொழிபெயர்ப்பில் சிக்கல் நேரிடலாம் .*

*சான்று*

*அறத்தாறு இது என வேண்டா சிவிகை*

*பொறுத்தானோடு ஊர்ந்தானிடை (37)*

*இதில் முதல் வாக்கியம், 'அறத்தாறு இது என வேண்டா' என்பது. இது முற்றுப்பெற்று விடுகிறது. 'சிவிகை பொறுத்தானோடு ஊர்ந்தானிடை' என்பது அடுத்த வாக்கியம். சில சொற்கள் மறைந்து அல்லது குறைந்து காணப்படுவதால் வாக்கியம் குறை வாக்கியமாக உள்ளது. எனவே இதனை வாசிப்பவர் முழுமையாகப் புரிந்து கொள்ள முயல வேண்டும். அவரவர் புரிந்து கொள்ளும் விதத்தில்தான் அதன் பொருள் வெளிப்பட்டு அதன் அடிப்படையில் மொழிபெயர்ப்பும் அமையும்.*

***சொற்பொருள் சிக்கல்கள்***

*சொற்பொருள் சிக்கல்கள் என்பது ஒரு சொல்லுக்கு எவ்வாறு பொருள் கொள்கிறோம் என்பதைப் பொறுத்து எழுவது. இலக்கிய ரீதியாக, சூழலைப் பொறுத்து, ஒரு சொல்லுக்குப் பல அர்த்தங்கள் இருப்பது இயல்பு. ஒரு சொல் இயல்பாகவே பலபொருள் கொண்டு அமைந்திருக்கலாம். ஒரு சொல் சிறப்பர்த்தத்தைக்கொண்டும் பயன்படுத்தப்படலாம். எந்தச் சொல்லுக்கும் பல கோணங்களில் அர்த்தங்கள் பெறப்படலாம்.*

*பெற்றார்ப் பெறின்பெறுவர் பெண்டிர் பெருஞ்சிறப்புப்*

*புத்தேளிர் வாழும் உலகு. (58)*

*என்னும் குறளில் உரையாசிரியர்களும் மொழிபெயர்ப்பாளர்களும் 'மனைவியர் மேலுலகிலும் பெருஞ்சிறப்புப் பெறுவர்', 'மகளிர் தேவர்கள் வாழும் உலகில் அவர்களால் பெருஞ்சிறப்புப் பெறுவர்', 'மகளிர் தேவர்கள் வாழ்கின்ற உலகத்திலே மிக்க மேம்பாட்டை யடைவர்', 'பெண்கள் தேவர் வாழும் உலகில் உள்ள பெருஞ்சிறப்பினை அடைவர்' என்றெல்லாம் பொருள் கொண்டு சுற்றி வேறு வேறு கருத்துக்கள் வெளியிட்டிருப்பதைக் காணக் கூடியதாக உள்ளது.*

பொதுவாக ஒரு சொல்லை அதன் வேர்ச்சொல்லிலிருந்து எழும் அர்த்தத்திலேயே மூலப்பிரதி பயன்படுத்துவது வழக்கமாக இருந்திருக்கிறது. அதுபோல, காலப்போக்கில் மாறிய அர்த்தத்தைக் கொண்டு ஒரு சொல் அறியப்படும் போதும், ஒரு படைப்பின் உள்ளடக்கப் பொருள் பழைய பொருளில் புரிந்து கொள்ளப்படுவதன் காரணமாக மொழிபெயர்ப்பு சிக்கலாகி விடும் .



***நடையியல் சிக்கல்கள்***

*மொழியியல் நோக்கிலான விலகல்கள், முன்னணிப் படுத்தல்கள், கலாச்சாரம், ஒரு குறிப்பிட்ட சமூகம் அல்லது வாழும் இடம் , பின்பற்றும் பழக்க வழக்கம் இவற்றால் அடையாளப்படுத்தப்படும் உருவகங்கள், குறியீடுகள் போன்றவையும் இலக்கியத்தைச் சிறப்பிக்கின்றன. பொதுவான உவமை, உருவகம் போன்ற அணிகளை மொழிபெயர்ப்பதிலும் இரட்டைக் கிளவிகள் போன்றவையும் ஏவல் வினை, வியங்கோள் வினை போன்ற சவால்கள் உண்டு இவற்றை மொழிபெயர்ப்பது கடினமான ஒன்று. செவ்வியல் இலக்கியமான திருக்குறளை மொழிபெயர்க்கும் இவற்றினால் ஏற்படும் சிக்கல்கள் அதிகம் .*

*சான்றாக, பின்வரும் குறள்*

*கற்றதனால் ஆய பயனென்கொல் வாலறிவன்*

*நற்றாள் தொழாஅர் எனின். (2)*

*'என்ன பயன்' என்ற கேள்வி கொண்ட இக்குறளை ஸ்ரீஅரவிந்தர் அதைக் "கற்றால் என்ன பலன்" என்று மொழிபெயர்க்கிறார். போப் 'எந்தப் பழங்கதையினாலும் பயன் இல்லை'' என்று மொழி பெயர்க்கிறார், 'பழங்கதை வீண்' என்று சுத்தானந்த பாரதி மொழி பெயர்க்கிறார். கற்றதனால் வரும்*

"இலாபம் என்ன.." என்று ட்ரூவும், "என்ன பிரயோஜனம்..." என்று பி.எஸ்.சுந்தரம் சற்று மாறுதல் கொண்ட கேள்வியாக்குகின்றனர். இவ்வாறு மொழிபெயர்க்கும் போது மூலப் படைப்பில் இருக்கக் கூடிய கட்டமைப்பின் நுணுக்கங்கள், நடையியலில் மாறுபடும் சிக்கல்களாக உருவாகின்றன.



கலாச்சாரச் சிக்கல்கள்

இலக்கிய மரபு சார்ந்த சிக்கல்கள் பல மொழிபெயர்ப்பில் உள்ளன. பிற கலாச்சாரங்களில் காண முடியாத ஒவ்வொரு இலக்கிய மரபிற்குமுரிய பல சொற்கள் இலக்கியத்தில் உண்டு. அது போலவே சமூகப் பண்பாடு சார்ந்த கருத்தியல்கள் இலக்கியங்களில் இடம் பெறுவதும் இயல்பே. ஒரு குறளின் பொருளையறிய அக்குறளின் உரையை மட்டுமில்லாது அது எந்த அதிகாரத்தில் எத்தகைய கருத்தை வெளிப்படுத்துவதற்காகச் சொல்லப்பட்டது என்பதையும் கருத்திற்கொண்டால்தான், அந்தக் குறளின் உட்கருத்தைத் தெளிவாகப் புரிந்து கொள்ள முடியும்.

“ஐந்தவித்தான் ஆற்றல் அகல்விசும் புளார்கோமான்

இந்திரனே சாலும் கரி” (25) என்ற திருக்குறள்

*Their might who have destroyed 'the five', shall soothly tell*

*Indra, the lord of those in heaven's wide realms that dwell.* எனப் பொருள் படும்

*Indra, the king of the inhabitants of the spacious heaven, is himself, a sufficient proof of the strength of him who has subdued his five senses* என்ற விளக்கத்துடன் *(G U Pope)* மொழிபெயர்த்துள்ளார்.

# சந்திரோதயம் பதிப்பகம், மதுரை

**3/422, Thiruvalluvar Street,**
**Dinamani Nagar, Madurai 625 018.**
**Mob: +91 7010997639**

| | நூல்கள் | விலை (Rs.) |
|---|---|---|
| *1.* | *திருவிளையாடல் புராணக் கதைகள் (எளிய உரைநடையில்)* | *200* |

**கவிஞர் முத்தமிழ் விரும்பியின் கவிதை நூல்கள்**

| | | |
|---|---|---|
| *1.* | *உன்னோடு உரையாடுதல்* | *100* |
| *2.* | *காதல் மொழி* | *200* |
| *3.* | *பார்வையில் பூத்த நிலா* | *100* |
| *4.* | *தேனடையும் வரலாறு* | *100* |
| *5.* | *நுண்கலை மருத்துவன்* | *200* |
| *6.* | *தொடரும் புழுதிக்கால்கள்* | *100* |

**முனைவர் செ. இராஜேஸ்வரியின்**

**எம்.ஜி.ஆர். பற்றிய நூல்கள்**

| | | |
|---|---|---|
| *1.* | *வெற்றித்திருமகன் எம்.ஜி.ஆர்.* | *200* |
| *2.* | *எம்.ஜி.ஆர். நிழல் நிஜம் நிரந்தரம்* | *200* |
| *3.* | *சிக்கு மங்கு சிக்கு மங்கு சச்ச பப்பா (எம்.ஜி.ஆர். கற்பிக்கும் குழந்தை வளர்ப்பு முறைகள்)* | *200* |
| *4.* | *வீரமகன் போராட வெற்றி மகள் பூச்சூட* | *200* |
| *5.* | *மகளிர் போற்றும் மக்கள் தலைவர் எம்.ஜி.ஆர்.* | *200* |
| *6.* | *எம்.ஜி.ஆர். ஒரு ஜீவ நதி* | *200* |
| *7.* | *எம்.ஜி.ஆர். ஒரு கலியுகப்போராளி* | *200* |
| *8.* | *ஒளி விளக்கு எம்.ஜி.ஆர்.* | *200* |
| *9.* | *வெற்றிப் படிக்கட்டில் நாடோடி மன்னன் – I* | *200* |
| *10.* | *நீங்க நல்லா இருக்கணும் [எம்.ஜி.ஆரின் திரைப்படப் பாடல்கள் - I]* | *200* |
| *11.* | *பாட்டுடைத் தலைவன் எம்.ஜி.ஆர். [எம்.ஜி.ஆரின் திரைப்படப் பாடல்கள் - II]* | *200* |
| *12.* | *இரசிகர்களின் இதய தெய்வம் எம்.ஜி.ஆர்.* | *200* |
| *13.* | *முத்தமிழ்க் காவியம் மதுரை வீரன்* | *200* |
| *14.* | *இரட்டை வேடத்தில் ஜொலிக்கும் எம்.ஜி.ஆர்.* | *200* |
| *15.* | *எம்.ஜி.ஆர். படங்களில் அறிவியல் புனைவு* | *200* |
| *16.* | *படகோட்டி, மீனவ நண்பன் ஓர் ஒப்பீடு* | *200* |
| *17.* | Unique Fandom of MGR | *200* |
| *18.* | *எம்.ஜி.ஆர். படங்களில் தொழில் தர்மம்* | *200* |

| | | |
|---|---|---|
| *19.* | *எம்ஜிஆர் படத்தில் சண்டைக்காட்சிகளின் சுவாரஸ்யங்கள்–I* | *200* |
| *20.* | *எங்க வீட்டுப்பிள்ளை* | *200* |
| *21.* | *எம்.ஜி.ஆர். வீடும் விருந்தும்* | *200* |

**முனைவர் சந்திரிகா சுப்பிரமணியன் நூல்கள்**

| | | |
|---|---|---|
| *1.* | *தலைமை பொறுப்பேற்கலாம்* | *120* |
| *2.* | *இணையத் தமிழ்* | *150* |
| *3.* | *ஊடகச் சட்டங்கள்* | *250* |
| *4.* | *ஆஸ்திரேலியாவில் அருந்தமிழ்* | *200* |
| *5.* | *கொசு வீட்டில் பாயாசம் (சிறுவர் நூல்)* | *200* |
| *6.* | *மாயோன் வீட்டுத் தோட்டத்தில் (சிறுவர் நூல்)* | *200* |

**முனைவர் செ. இராஜேஸ்வரியின்**
**சமூகப்பண்பாட்டு ஆய்வு நூல்கள்**

| | | |
|---|---|---|
| *1.* | *பண்பாட்டு நகர்வுகள் – தமிழ் நாட்டில் இருந்து ஜப்பானுக்கு* | *200* |
| *2.* | *பெண் தெய்வ வழிபாடு* | *200* |
| *3.* | *தேவேந்திரன்* | *200* |
| *4.* | *மருதநிலப் பெண் தெய்வங்கள் (வராகி, பிடாரி, தவ்வை)* | *200* |
| *5.* | *இரு நிலத்தில் திருமுருகன்* | *200* |
| *6.* | *முன்னோர் வழிபாடு (கதிரவன், காலதேவன், நாகர் வழிபாடும்)* | *200* |
| *7.* | *வேளாண்மரபில் விதைப்பும் பூப்பும்* | *200* |
| *8.* | *யானைக்கடவுள்* | *200* |
| *9.* | *பெண் பூப்பின் புனித வழிபாடு* | *200* |

## முனைவர் செ. இராஜேஸ்வரியின்

**கவிதைத் திறனாய்வு நூல்கள்**

| | | |
|---|---|---|
| *1.* | *பாடுபொருளும் பாசப்பொருளும்* | *250* |
| *2.* | *"பூ மர நிழலி"ன் களமும் காலமும்* | *200* |
| *3.* | *"2020 தைமாதத்தில் இன்று" கவிதையில் அடிக்கருத்தியல் ஆய்வு* | *100* |
| *4.* | *கவிஞர் முத்தமிழ் விரும்பியின்* **கவிதையில் காதல்** | *100* |
| *5.* | *கவிஞர் முத்தமிழ் விரும்பியின் பயணக் கவிதைகள்* | *200* |

## ஆங்கிலக் கவிதைகளின் தமிழ் மொழி பெயர்ப்பு

**முனைவர் செ. இராஜேஸ்வரி**

| | | |
|---|---|---|
| *1.* | *எட்டுத்திக் கும் செல்வீர்* | *200* |
| *2.* | *அவன் கடவுளுக்கு நிகரானவன்* | *200* |
| *3.* | *செக்கச் சிவந்த ரோஜா* | *200* |
| *4.* | *கலீல் ஜிப்ரா னின் "மணலும் நுரையும்"* | *200* |
| *5.* | *கலீல் ஜிப்ரானின் "பாடல்கள் 14"* | *200* |

## Tamil Classics in English – (Dr. C. Rajeswari)

| | | |
|---|---|---|
| *1.* | Kurunthokai | *200* |
| *2.* | Aganaooru | *200* |
| *3.* | Purananooru | *200* |

| | | |
|---|---|---|
| *4.* | Naaladiyaar | *200* |
| *5.* | Aasaarakkovai | *200* |
| *6.* | Thiru Kutraala Kuravanji | *200* |

**தற்காலத் தமிழில் சங்க இலக்கிய நூல் வரிசை**

| | | |
|---|---|---|
| *1.* | *குறுந்தொகைக் கவிதைகள்* | *200* |

**மொழிபெயர்ப்பு ஆய்வு நூல்கள் – முனைவர் செ. இராஜேஸ்வரி**

| | | |
|---|---|---|
| *1.* | *மொழிபெயர்ப்பியல் ஆய்வு (ஆய்வு நூல்)* | *200* |
| *2.* | *கவிதை மொழிபெயர்ப்பு* | *200* |
| *3.* | *நவீன மொழிபெயர்ப்பு உத்திகள் (Co-author)* | *200* |
| *4.* | *மொழிபெயர்ப்பில் பெயரும் பொருளும்* | *200* |

**தமிழ் இலக்கண நூல்**

| | | |
|---|---|---|
| *1.* | *தமிழில் வேற்றுமை உருபுகள்* | *200* |

**சிறு கதை, கவிதை**

| | | |
|---|---|---|
| *1.* | *அமராவதியின் காதல் - சத்யப்பிரபா* | *200* |
| *2.* | *ரோஜா மொட்டு (சித்திரக் கவிதைகள்) - சத்யப்பிரபா* | *200* |

**மாத இதழ்கள்**

| | | |
|---|---|---|
| *1.* | *தமிழணங்கு மாத இதழ்* | *200* |
| *2.* | *Love Thamizh* | *500* |

**பேராசிரியர் முனைவர் தே.ஞானசேகரனின் நூல்கள்**
**ஆங்கிலத்தில் – முனைவர் செ. இராஜேஸ்வரி**

**Moonstone Publication, Madurai**

| | | |
|---|---|---|
| *1.* | Emerging Mallarism | *200* |
| *2.* | Festival of lord Indra | *200* |
| *3.* | Role of Devendirar's in Indian war of Independence (Sundaralingam Kudumbanar) | *200* |
| *4.* | Re reading of Pallu literature | *200* |
| *5.* | Mallariyan Literature | *200* |
| *6.* | Frontyard without My Dad (Poem) | *200* |

**Poems of Er.Poet Muththamizh Virumbi - In English Dr. C. Rajeswari**

**[Moonstone Publication]**

| | | |
|---|---|---|
| *1.* | Therapist of the Finest Art | *200* |
| *2.* | Following Dusty Feet | *200* |

**Other Books**

| | | |
|---|---|---|
| *1.* | Concepts of Constitution - Dr.S. Kalai Arasu | *300* |
| *2.* | Aranyani By Vijeni (English Novel Part I & Part II) | *200* |

***தமிழணங்கு மாத இதழை வெளியிடுவோர்: இ. சதீஷ் ராஜ்குமார் (அட்வகேட்), இயக்குனர், சந்திரோதயம் அறக்கட்டளை, 3/422, தினமணி நகர், மதுரை 625 018, Ph: +91 7871123226***